உ.

வந்தேமாதரம்.

# அபிமன்யு



வெங்களத்தூர்
சாமிநாத சர்மா
எழுதியது.

'வசந்தாலயம்'
மாம்பலம் - சென்னை.



எட்டணா.

எனது வளர்ச்சியே

தங்களது வாழ்வெனக் கொண்ட

என் பெற்றோர்கள்

ஸ்ரீமான்

கங்கையாடி முத்துசாமி ஐயர்

ஸ்ரீமதி

பார்வதி அம்மாள்

இவர்களின்

பொன்னடிகட்கு

வந்தேமாதரம்.

# முகவுரை.



இச்சிறு நாடகம், பாரதம் பதின்மூன்றுநாட் போர்க்கதையை ஒருவாறு தழுவி எழுதப்பெற்றது. பழமையில் புதுமை பொலிய வேண்டுமென்பது எனது அவா. அதனை இச்சிறு நாடகத்தில் எவ்வளவுதூரம் புகுத்தியிருக்கிறேனென்பதைத் தமிழுலகத்தின் நன்மதிப்புக்கு விட்டு விடுகிறேன். இதிலுள்ள மாறுபாடுகளும் குறைபாடுகளும் என்னுடையன என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலை யான் விரைவினில் எழுதி முடிக்க வேண்டுமென்று பல் காலும் ஊக்கிப் பல்லாற்றானும் உதவி செய்த அன்பர் பலர்க்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு, அவர்கட்கு எல்லா நலன்களையும் அருள வேண்டுமென்று ஆண்டவனை வழுத்துகிறேன்.

நமது பண்டைய நூல்களில் பொதிந்து கிடக்கும் பல அரிய கதைகளுக்குப் புதிய ஆடை அணிவித்து, புத்துணர்ச்சி ஊட்டித் தமிழ்மக்களுக்குக் காட்சி தரவேண்டுமென்ற எளியேனது ஆசை நிறைவெய்து நாள் என்னாளோ ?

நந்தாய்நாடு நற்றவவானினும் நனிசிறக்கவே !

வெ. சாமிநாதன்.

பவ, ஆடி, கசு.

# அபிமன்யு.

## நாடக பாத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| யுதிஷ்டிரர்<br>பீமன்<br>அர்ஜுனன்<br>நகுலன்<br>சகதேவன். | .... | பஞ்ச பாண்டவர்கள். |
| துரியோதனன்<br>துச்சாதனன் | .... | கௌரவர்களில் முதலிருவர். |
| துரோணாசாரியார்: | | கௌரவர்களின் சேனாதிபதி. |
| சகுனி<br>சல்யன்<br>கர்னன்<br>ஜயத்ரதன் | ... | கௌரவர்களைச் சேர்ந்தவர்கள். |
| அபிமன்யு | .... | அர்ஜுனன் புதல்வன். |
| வியாசர் | .... | ஒரு தவச் சிரேஷ்டர். |
| ஸ்ரீ கிருஷ்ணர் | .... | பாண்டவர் சகாயன். |
| வாஜபேயர்<br>சோமயாஜுலு | .... | இரண்டு அந்தணர்கள். |
| சுபத்திரை: | .... | அபிமன்யுவின் தாயார் |
| உத்தரை: | .... | அபிமன்யுவின் மனைவி. |

மற்றும் போர்வீரர்கள், சோமயாஜுலுவின் மனைவி, தோழி முதலியோர்.

கதை நிகழுமிடம்:—குருக்ஷேத்திரம்.

உ

வந்தேமாதரம்.

# அபிமன்யு.

## முதல் அங்கம்

### முதற் களம்.

இடம்:—குருக்ஷேத்திரத்தில் கௌரவர்கள் பாசறை.

காலம்:—இரவு.

[துரியோதனன், துச்சாதனன், ஜயத்ரதன், சகுனி முதலிய பலர் வீற்றிருக்கின்றனர். துரோணாசாரியார் தனியாக ஓர் உயர்ந்த ஸ்தானத்தில் அமர்ந்திருக்கிறார்.]

ஜயத்ரதன்:—[சிறிது ஏளனமாக] அந்தணர் தம் பொலிவும், அரசர் தம் வீரமும் நிறைந்த துரோணாசாரியார், கௌரவ சேனாதிபதியாகமட்டும் இல்லை; பாண்டவர்களின் குருவாகவும் இருக்கிறார்.

துரோணாசாரியார்:—அதில் என்ன தவறு?

துரியோதனன்:—அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. படிப்பது வேதம்; பிடிப்பது வில்லாயுதம்! பூசையெல்லாம் இங்கே; பக்தியெல்லாம் அங்கே! உண்பதெல்லாம் இங்கே; உழைப்பதெல்லாம் அங்கே!

துரோ:— நிறுத்து, நிறுத்து சுயோதனா! உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் ஜாதி இன்னும் ஆரியாவர்த்தத்தில் உதிக்கவில்லை.

துரி:— உண்மை. ஆனால் காண்பது என்ன ? தினந்தோறும் பாண்டவர்களின் வெற்றி! கௌரவர்களின்தோல்வி!

துரோ:— யுத்த களத்தில் வெற்றியும் தோல்வியும், ஆரவாரமும் அழுகையும் சகஜந்தானே.

துச்சாதனன்:—ஒரு நாள் வெற்றியும் ஒரு நாள் தோல்வியுமாக இருந்தால், இந்தச் சமாதானம் ஏற்றுக் கொள்ளப்படலாம். ஆனால்—

துரி:— தன் சேனையின் தோல்வியில் சேனாதிபதிக்குக் கவலையில்லாமலிருக்கும் பொழுது—

ஜய:— ஆனால் சத்துருக்களின் வெற்றியைக் கண்டு மகிழ்ச்சி பொங்குகிறது.

துரி:— இதன் காரணந்தான் விளங்கவில்லை.

ஜய:— காரணமா? குரு துரோணாசாரியாருடைய அஸ்திரங்க்ள்,சிஷ்யன் அர்ஜுனன் சந்நிதானத்தில் தலைவணங்கி, வாய் பொத்தி நிற்கின்றன!

துச்:— அவைகளுக்கு ஆசி கூறி அனுப்புகிறார் ஆசாரியார்!

ஜய:— அர்ஜுனன் பாணம் விடுக்கும் திறமையைக் கண்டு, ஆசாரியாருடைய வாயிலிருந்து ஹா! ஹா! என்ற சப்தம் அவரை யறியாமலே வருகிறது!

துச்:— அர்ஜுனன் செலுத்தும் குருபக்திக்கு இதைக்கூட சன்மானமாகச் செய்யக் கூடாதென்று ஆசாரியாரை நீ தடுக்கிறாயா?

ஜய:— அர்ஜுனனுக்குத் தோன்றாத் துணையாக ஸ்ரீ கிருஷ்ண பகவான் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கிறார். அவருடைய சுதர்சனம் பாண்டவர்களுக்கு ரட்சையாக விளங்குகிறது.

துரி:— ஆசாரியார் அந்தக் கிருஷ்ணனுக்குப் பக்தி சிரத்தையோடு வந்தனை செய்கிறார்!

துரோ:— ஏன் இப்படி நிந்தனை செய்கிறாய் துரியோதனா? ஏச்சுப் பேச்சுகளும், வியங்க வார்த்தைகளும் கோழைகளின்

உரிமைப் பொருள்களன்றோ? இராஜ சபையிலே வீரம் பேசுவது சுலபந்தான்! ஆனால்—

ஜய:— ஆனால் என்று இழுத்துப்பேசவேண்டாம். யுத்த களத்திலேயும் கௌரவர்கள் தங்கள் சேனாதிபதிகளால்காட்டிக் கொடுக்கப்பட்டாலன்றி, புற முதுகு காட்ட மாட்டார்கள்.

துரோ:— [கோபத்துடன் எழுந்து] என்ன சொன்னாய்? சேனாதிபதிகளால் காட்டிக் கொடுக்கப்பட்டால் – [தலையசைத்துக் கொண்டே] உம்–நாவை உள்ளடக்கிப் பேசு. உன்னைப் போன்ற அற்பப் பூச்சிகளின் கலப்பினாலேயே, குரு வமிசத்தின் தூய்மையான இரத்தம் இப்பொழுது களங்கமடைந்திருக்கிறது. துரியோதனா! என்னுடைய சேனாதிபத்தியத்தில் உனக்கு நம்பிக்கையில்லையானால், இந்தா, இந்த உடைவாள்–[உடைவாளைக் கழற்றுகிறார்]

துரி:— ஆசாரியார் கோபித்துக் கொள்ளக் கூடாது. ஜயத்ரதா! நீங்கள் எல்லாரும் சும்மாயிருங்கள். தினந்தோறும் ஏற்பட்டு வரும் தோல்வியினால் மனமுடைந்து நாங்கள் இப்படிக் கூறினோமே யன்றி, தங்களை அவமானப் படுத்த வேண்டுமென்ற நோக்கமில்லை. [பொறுத்து] இன்றைய யுத்தத்திலேனும் நமக்கு வெற்றி ஏற்படுமா?

துரோ:– வெற்றியும் தோல்வியும் சேனாதிபதி வசத்தில் இருக்கிறதா? ஆயினும் ஒன்று கூறுகிறேன்; அதுவும் உங்கள் சந்தேகத்தைத் தீர்த்தற் பொருட்டு. நாளைய யுத்தத்தில் பாண்டவ வீரர்களில் ஒருவனைக் கொல்விக்கிறேன்.

துரி:— இதை நாங்கள் ஒரு பிரதிக்ஞையாக ஏற்றுக்கொள்ளலாமா?

துரோ:— [கோபச் சிரிப்புடன்] பிரதிக்ஞையா? இதோ, என்னுடைய பிராமண தருமம்; என்னுடைய க்ஷத்திரியவீரம். இவைகளைப் பணயமாக வைத்துக் கொள். நாளைய போரில் நான் வகுக்கும் சக்ரவியூகத்தை உடைத்தெறிய முயலும் போது, பாண்டவ வீரர்களில் யாராவது

ஒருவன் இறக்காவிட்டால், இவைகளை நீ எடுத்துக்கொள் ளலாம்.

துரி:— அப்படியானல் அந்தச் சக்ரவியூகத்தை உடைக்க எவ ராலும் முடியாதோ?

துரோ:— அர்ஜுனன் ஒருவனல்தான் முடியும். ஆனல்அதைப்பற் றிக் கவலை வேண்டுவதில்லை. சம்சப்தகர்களோடு யுத்தம் செய்வதற்காக அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் சென்றிருக்கிருன். ஆதலின் நமக்கு வெற்றி நிச்சயம்.

துச்:— நாளை மாலைக்குள் பார்ப்போம்!

துரோ:— பார்ப்போமா? ஆண்டவன் சாட்சியாக, ககன மார்க் கத்திலே சஞ்சரித்திடும் தேவ கணங்கள் சாட்சியாக, ப்ரஹ்மா வர்த்தமென்கிறஇந்தப்புண்ணிய பூமியின்சாட் சியாக, நாளைய ரணரங்கத்திலே பாண்டவ வீரர்களி லொருவனுடைய தலை உருளும்படி செய்கிறேன். அப் படிச் செய்யாவிட்டால் வீரஸ்வர்க்கம் எனக்கு இல்லா மற் போவதாக! பாரததேசத்து வீராங்கனைகள் என் னைச் சபிப்பார்களாக! அந்தச் சாபத்திலே, என்னுடல் மட்டுமல்ல, என்னுயிர் மட்டுமல்ல, என்னுடைய கீர்த் தியும், என்னுடைய வீர வாழ்க்கையும் சாம்பராகப் போகுமாக.

துரி:— ஆசாரியாருக்கு எங்கள் வணக்கம். [அனைவரும் வணங்குகி ருர்கள்] சேனதிபதியின் வாக்குறுதியிலே குரு வமிசத் தின் வாழ்வும் தாழ்வும் இருக்கின்றது.

துரோ:— பகவானுடைய திருவருள் எப்படி யிருக்கிறதென்று யாருக்குத் தெரியும்? [இச்சமயத்தில் யுத்த முழக்கம் கேட்கிறது] அதோ ! யுத்த கோஷம் ! அனைவரும் என்னேடு சிறிது வாருங்கள். சக்ரவியூகத்தை வகுக் கச் சில ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

[துரோணுசாரியாரை முன்னிட்டு அனைவரும் செல் கின்றனர்]

துச்:— [சென்று கொண்டே] யுதிஷ்டிரனுடைய தருமம், துரோ ணருடைய பிரதிக்ஞை முன்னர் என்ன செய்யப்

போகிறதென்று பார்ப்போம்.

[அனைவரும் செல்கின்றனர்]

## இரண்டாவது களம்.

இடம்:— பாண்டவர்களின் பாசறை.

காலம்:— காலை.

[அர்ஜுனனைத் தவிர்த்த பாண்டவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். யுதிஷ்டிரர் மட்டும் கவலையோடு உட்கார்ந்திருக்கிறார். அபிமன்யு ஒரு புறமாக நிற்கிறான். மற்ற வீரர்கள் சிறிது தூரத்தில் நிற்கிறார்கள்]

அபிமன்யு:—ஐயனே! வீண் கவலை எதற்கு? சத்துருக்கள் சக்ரவியூகம் வகுத்தாலென்ன? வச்சிரக்கோட்டை கட்டினாலென்ன? நமது தேகத்தில் பிராணன் இருக்கும் வரை நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?

யுதிஷ்டிரர்:—குமாரா! நீ ஒன்றும் அறிய மாட்டாய். சக்ரவியூகத்தை வகுத்துள்ளது யார் தெரியுமா? நமது குரு துரோணாசாரியார்.

அபி:— இருக்கட்டுமே. குருவாயிருந்தாலென்ன? உருவமே இல்லாத அந்தக் கடவுளா யிருந்தாலென்ன? பீமனுடைய கையிலே கதாயுதம் இருக்கிறது; அர்ஜுனனுடைய அஸ்திரத்திலே காண்டீவம் இருக்கிறது; இவைகளுக்கு மேலாக மாமா கிருஷ்ணருடைய சுதர்சன சக்ரம் நமக்குப் பாதுகாப்பா யிருக்கிறது. இன்னும் ஏன் வியாகுலப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்?

யுதி:— அபிமன்யு! சக்ரவியூகத்தை உடைத்தெறிய உனது தகப்பனார் அர்ஜுனன் ஒருவனால் தான் முடியும். அவன் இல்லாத சமயம் பார்த்தே கௌரவர்கள் இந்தச் சூழ்ச்சியைச் செய்திருக்கிறார்கள்.

அபி:— அர்ஜுனன் இல்லாவிட்டால் என்ன? அர்ஜுனன் அமிசமாக நான் இல்லையா? என்னுடைய முகத்திலே வீரக்களை இல்லையா? பாண்டு வமிசத்தின் பவித்ர

ரத்தம் என் தேகத்திலே கொந்தளித்துக் குமுறி எழ வில்லையா ?

பீமன்:— [தனக்குள்] அர்ஜுனனுடைய பூரண தேஜசும் இங்கே ஒளிவிட்டு வீசுகிறது !

யுதி:— மகனே ! நீ தெரியாமல் பேசுகிறாய். அநுபவமில்லாத உற்சாகமானது கடிவாளமில்லாத குதிரையைப் போன்றது. எம்போன்றவராலேயே பிளக்க முடியாத சக்ர வியூகத்தை, உன்னால் எப்படி உடைத்தெறிய முடியும் ? தவிர, எங்களுடைய வருங்கால வாழ்வானது, உன்னுடைய வளர்ச்சியிலேயே இருக்கிறது. அப்படியிருக்க உன்னை யுத்தகளத்திற்கு அனுப்பிவிட்டு, நாங்கள் இங்கிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்போமா ?

அபி:— அப்படியானால் இப்படியே கவலைப்பட்டுக் கொண்டிருக்கப் போகிறீர்களா ? இதனால் சத்துருக்களின் சூழ்ச்சியைத் தகர்த்தெறிந்து விட முடியுமா ?

யுதி:— குமாரா ! இந்தச் சத்துருக்களெல்லாம் நமது மித்துருக்களே. ஒரு மரத்தினின்று பிரிந்த இரண்டு கிளைகள். ஒரு நிலத்தில் விளைந்த பயிர்.

அபி:— ஐயனே ! என்னை மன்னிக்க வேண்டும்; இது தவச்சாலையல்ல; யுத்த பூமி. தருமோபதேசம் செய்யவோ அல்லது கேட்கவோ இங்கு நாம் கூடியிருக்கவில்லை. இது பாசறை. நாம் க்ஷத்திரியர்கள். கௌரவர்களோடு போர் நடைபெற்று வருகிறது.

யுதி:— அப்பா ! பொறுமையாகப் பேசு.

அபி:— [வெறுப்புடன் தனக்குள்] பொறுமை ! பொறுமை ! [பிரகாசமாய்] பிதா ! இந்தப் பொறுமை என்னும் படுகுழியிலே பாண்டு வமிசத்தின் நற்பெயரைப் புதைத்து விடப் போகிறீர்களா ? மாதா துரோபதையின் சபதம் அபத்தமாகிவிடப் போகிறதா ? அன்று அவையிலே அடைந்த அவமானம் கருணையிலே கலந்து கரைந்து விடப் போகிறதா ?

பீமன்:— [தனக்குள்] பேஷ்! மகனே! பேஷ்!

யுதி:— அபிமன்யு! சக்ரவியூகத்தை உடைத்தெறிவது என்பது எல்லாராலும் முடியாது. பார்த்தன் ஒருவனால்தான் முடியும். அந்த மகா மந்திரத்தை அவன் ஒருவனே அறிவான்.

அபி:— நானும் அறிவேன் ஐயனே! அஃதென்ன அவ்வளவு பெரியகாரியம்?

யுதி:— அதை நீ எப்பொழுது கற்றாய்? யாரிடம் கற்றாய்?

அபி:— மாதா சுபத்திரை கர்ப்பவதியாயிருந்த பொழுது, ஒரு நாளிரவு எனது தகப்பனார் சக்ரவியூகத்தை உடைத்தெறிவது எப்படி என்பதுபற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார். அதை நான் வயிற்றிலிருந்த வண்ணம் கேட்டுக்கொண்டிருந்தேன். அஃது இப்பொழுது நன்றாக ஞாபகம் இருக்கிறது. இனியேனும் எனக்கு உத்திரவு கொடுப்பீர்களா?

யுதி:— சக்ரவியூகத்திற்குள் பிரவேசிக்கத்தெரிந்த உனக்கு, அதனின்றும் மீண்டுவரத் தெரியுமா?

அபி:— தெரியாது. ஆனால் அதைப்பற்றிக் கவலையுமில்லை. எப்பொழுது பிரவேசிக்கத் தெரிந்துவிட்டதோ, பிறகு அதனின்றும் திரும்பி வருவது அவ்வளவு கஷ்டமான செயலன்று. எனக்கு விரைவிலே விடை தாருங்கள்.

யுதி:— பாலா! உன் தகப்பனாருக்கு அது கஷ்டமான செயலன்று. ஆனால் மற்றவருக்கு முடியாது. தெரியாமலா துரோணர் அர்ஜுனன் இல்லாத சமயம் பார்த்து இந்தத் தந்திரத்தைக் கையாண்டிருக்கிறார்?

அபி:— எனது பிதா ஒருவர் இல்லாவிட்டால், பாரத யுத்தமே நின்றுவிடும் என்பது தங்கள் கருத்தா? பாண்டவர்களுக்கு ஏற்பட்ட களங்கத்தைத்துடைக்க அர்ஜுனன் ஒருவனால் தான் முடியும் என்பது தங்கள் எண்ணமா? அப்படியானால் நான் அர்ஜுனன் புத்திரனில்லை. அவருடைய புகழிலே பிரகாசித்துக் கொண்டிருக்க

நான் விரும்ப வில்லை. என்னுடைய வீரத்திலே, என் தேகத்தினின்று வழிந்தோடும் இரத்தப் பெருக்கில் ஜ்வ லிக்கும் கீர்த்தியிலே, பாரத தேசத்து நாரீமணிகள் வாசிக்கும் யாழிலே நான் வாழ விரும்புகிறேன். [பொறுத்து] பிதா! குருவம்சத்தைக் கருவறுக்க எனக் கும் உரிமை யுண்டு. அந்த அரவக்கொடியை அறுத்து நிலத்தில் வீழ்த்தி, அதன் மீது எனது இரத்தத்தைச் செலுத்த வேண்டும். பிதா பீமசேனருடைய விருத மும் முடிய வேண்டும். மாதா துரோபதையின் உள் ளம் குளிரவேண்டும். அந்த உள்ளக் குளிர்ச்சியிலே, தங்கள் ஆசிர்வாதத்தின் திரு நீழலிலே யான் சாந்தி யடையவேண்டும். பிதா! சீக்கிரம் உத்திரவு கொடுங்கள்.

யுதி:— ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவினுடைய அருளினாலும், எங்க ளுடைய ஆசிர்வாத பலத்தாலும் நீ நீடூழி வாழக் கட வாய். ஆனால், மகனே! பதினாறு வயதும் நிரம்பப் பெறாத உன்னை சக்ரவியூகமெனும் காலாக்கினியிலே எப்படி மனமொப்பித் தள்ளுவேன்?

அபி:— அந்த அக்கினியிலிருந்து தங்கத்தைப் போல் அதிகப்பிர காசமாய் தங்களிடம் மீண்டு வருவேன். அந்தப் பிர காசத்திலே தங்களுடைய ஆனந்தமும் கலந்து, பாண்டு வமிசத்திற்கு அழியாத புகழைத் தேடித்தரும்.

யுதி:— இல்லையப்பனே! ஒருகாலும் முடியாது. உன்னை யுத்த களத்திற்கு விடை கொடுத்து அனுப்ப முடியாது. சுபத்திராதேவியினால் அன்புடன் வளர்க்கப்பட்டு வந்த இந்தக் கோமள சரீரத்திலே சஸ்த்ர வர்ஷமா! இந்தப் பொன் மேனியிலே யுத்த களத்தின் புழுதியா! வேண் டாம்; நீ யுத்தகளத்திற்குப் போகவேண்டாம். நேராக உத்தரையிடம் சென்று அவளுடைய தனிமையை நீக்கு.

அபி:— [சிறிது கோபச் சிரிப்புடன் தனக்குள்] அம்மட்டும் ஆடையாபரணங்களை அணிந்துகொண்டு அம்சதூ ளிகா மஞ்சத்தில் அயர்ந்து நித்திரைசெய் என்று சொல்லாமற் போனாரே. [பிரகாசமாய்] பிதா!

என்னுடைய வீரத்திலே தங்களுக்கு ஏன் இவ்வளவு அவநம்பிக்கை? என்னைவிடக் குறைந்த வயதிலே, சூரிய வமிச திலகனுகிய இராம பிரான் கொடிய அரக்கர்களை அழித்து, விசுவாமித்திரருடைய யாகத்தைக் காப்பாற்றவில்லையா? மண்ணினைக்காத்த அந்த மன்னன் மைந்தர்கள்—வால்மீகியின் வயோதிகத்திலே வளர்ச்சி பெற்ற லவகுசர்கள்—யாகக் குதிரையைப்பிடித்துக் கட்டவில்லையா? தங்கள் சிறிய தந்தையைத் தோற்கடித்து பிதாவின் ஆசியைப் பெறவில்லையா? அவர்களால் செய்ய முடிந்த காரியத்தை நான் செய்ய முடியாதா? இளைஞர்களால் செய்ய முடியாத காரியம் உலகத்திலே என்ன இருக்கிறது?

யுதி:— [அபிமன்யுவின் அருகிற்சென்று] ஒன்றுமில்லை. ஆயினும் நீ போருக்குச் செல்லக்கூடாது. நீ இளங்குழந்தை; எங்கள் வாழ்வின் செல்வம்; எங்கள் குலத்துக்கொரு விளக்கு. துரோணருடைய யுத்த கோசலத்தை நீ அறிய மாட்டாய்.

அபி:— இல்லை பிதா! நான் சென்று வெற்றியுடன் திரும்பி வருகிறேன். எனக்கு ஆசீர்வாதம் செய்யுங்கள். [தலை வணங்குகிறான்]

யுதி:— பிடிவாதம் செய்யாதே. நீ தனியனுகச் செல்ல, நாங்கள் உன் வழியைப்பார்த்து ஏங்கி நிற்பதா?

அபி:— தந்தையே! நான் ஏன் தனியனுகச் செல்கிறேன்? என் தேகத்திலே தோளிருக்க, தோளிலே அம்புறுத் தூணியிருக்க, கையிலே வில்லிருக்க, இடையிலே வாளிருக்க நான் யாருக்கு அஞ்சவேண்டும்? அர்ஜுனன் புத்திரனுகப் பிறந்து, சுபத்திரா தேவியின் மடியிலே வளர்ந்து, தங்கள் அடியிலே பணிந்து நிற்கும் எனக்கு அச்சமேது? தனிமையேது? பிதா! இன்று எப்படியாவது நான் துரோணுசாரியாருடைய சந்நிதானத்தில் எனது தோள் வலியையும் வாள் வீச்சையும் காண்பிக்கவேண்டும்; அர்ஜுனன் இல்லாத காலத்துப் பாண்டவர்களைத்

2

தோற்கடித்துவிட வேண்டுமென்ற கௌரவர்களின் எண்ணம் பொய்யாகப் போகவேண்டும்; என்னுடைய பிரதிக்ஞை நிறை வேற வேண்டும்.

யுதி:— என்ன பிரதிக்ஞை அப்பா?

அபி:— சக்ரவியூகத்தை இன்று உடைத்தெறிவதாகப் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறேன். இவ்வாரிய நாட்டினில் சூரிய தேவன் வீரியத்துடன் பிரகாசிக்க மறுத்துவிட்டபோதிலும், இந்திர லோகத்திலிருந்து வந்தியர்கள் வந்து ஆரியாங்கனைகளின் அழகைக் கொள்ளைகொண்டு விட்டபோதிலும், சிந்து மாநதியை மந்திரம்போட்டு மடக்கி அந்தர தலத்திற்கு அழைத்துக் கொண்டுவிட்டபோதிலும் நான் கொண்ட பிரதிக்ஞையை மாற்றமாட்டேன். என் தேகத்திலே பிராணன் இருக்கும் வரை, அந்தப் பிராணனோடு பாண்டு வமிசத்தின் பவித்ர ரத்தம் கலந்திருக்கிற வரை, அந்த இரத்தத்திலே எனது தாப்ப பாலின் வேகம் இருக்கிற வரை நான் யுத்தம் புரிவேன். துரோணர் திகைக்க, துரியோதனன் தொடை நடுங்க, துச்சாதனன் தடுமாற ரணரங்கத்திலே நான் நாட்டியம் செய்வேன். தங்கள் பாத தூளியைத் தாருங்கள். [வணங்குகிறான்]

பீமன்:— அண்ணா! இனி யோசிக்கவேண்டாம். குமாரனுடைய பிரதிக்ஞை நிறைவேறுவதற்கு உதவி செய்யுங்கள். அர்ஜுனன் இல்லாத குறையை அபிமன்யு நிறைவேற்றி வைப்பான்.

யுதி:— [அபிமன்யுவின் சிரத்தில் கரம் வைத்து] அப்பா! உனது பிரதிக்ஞை பூர்த்தியாவதாக! வெற்றி மாலையுடன் விரைவிலே திரும்பி வந்து எங்களை மகிழ்விப்பாயாக! அர்ஜுனன் ஆண்டகைமையும், பகவான் வாசுதேவனின் நல்லாசியும் உன்னைக் காப்பாற்றட்டும்.

[அபிமன்யு அனைவரையும் வணங்கிவிட்டுச் செல்கிறான்]

யுதி:— [அபிமன்யு சென்ற வழியைப் பார்த்துக்கொண்டே பீமனைப் பார்த்து] தம்பீ! விஜயன் இல்லாத சமயம் நமக்கு இந்தப் பரிசோதனை ஏற்பட வேண்டுமா?

பீமன்:— அண்ணா! அபிமன்யுவைத் தனியாகச் செல்லவிடுதல் சரியன்று.

யுதி:— ஆம்; பாசறையில் இனி நமக்கென்ன வேலை?

[யுத்தகோஷம். அனைவரும் செல்கிறார்கள்]

---

## மூன்றாவது களம்.

இடம்:—அஸ்தினபுரத்தில் யமுனையாற்றங்கரை.

காலம்:—காலை.

[வாஜபேயர், சோமயாஜுலு என்ற இரண்டு அந்தணர் காயத்திரி ஜபம் செய்து கொண்டே பேசிக்கொண்டிருக்கின்றனர்]

வாஜ பேயர்:— எல்லாம் இந்தச் சகுனி வேலைதான்!

சோமயாஜுலு:—இராமாயணத்துக்குக் கூனி! பாரதத்துக்குச் சகுனி!

வாஜ:— ஆமாம். அங்கே இராமர்; இங்கே பீஷ்மர்.

சோம:— ஓய்! அப்படிச் சொல்லாதேயும். அவர் பெரிய சம்சாரி; இவர் சாதாரண பிர்ம்மசாரி.

வாஜ:— அவர் பித்ருவாக்ய பரிபாலனார்த்தம் வனவாசம்போனார். இவர் பிதாவின் சந்தோஷார்த்தம் இராஜ்யம், பாலியம் எல்லாவற்றையும் தியாகம் பண்ணிவிட்டார்.

சோம:— இதிலே யார் பெரியவர் என்று நீங்கள் நினைக்கின்றீர்கள்?

வாஜ:— பீஷ்மர்தான்; சந்தேக மென்ன இதில்?

சோம:— இல்லை, ராமர்தான்.

வாஜ:— இல்லை, பீஷ்மர்தான்.

சோம:— ஓய்! உளறாதேயுங்காணும். ஏன்? பீஷ்மராலே ஏதாவது காரியம் ஆகவேண்டியிருக்கோ உமக்கு?

வாஜ:— ஓய்! ஜாஸ்தி பேசினீர்களானல் பல்லே உடைச்சுடுவேன். [ஜபத்தை நிறுத்திக் கொண்டு இடுப்பில் துணியை வரிந்து கட்டுகிறார்]

சோம:— ஓய்! குருக்ஷேத்திர வாடை யடிக்கிறதோ உமக்கு? நீர் படித்த தர்க்க சாஸ்திரத்தை இந்த நதியிலேதான் மிதக்கவிடணும்.

வாஜ:— ஓய்! நாக்கை உள்ளடக்கிப் பேசும். உம்ம வியாகரணத்தைவிட, என்னுடைய தர்க்கம் ஒன்றுங் கெட்டுப் போகவில்லேங்காணும். உம்ம வியாகரணத்தை முதலில் நெருப்பிலே போட்டு பொசுக்குங்கோ; பிறகு என்னுடைய தர்க்கத்தை ஆற்றிலே மிதக்கவிடலாம்.

சோம:— உம்ம தர்க்கம் மிதக்கிறதோ இல்லேயோ, நீர் மிதக்கப் போகிறீர் இப்பொழுது; அது நிச்சயம்.

வாஜ:— உட்கார்ந்தபடியே அகாராந்தப்புல்லிங்கம் இகாராந்தப்புல்லிங்கம்என்று சொல்லி சுவடிகளேப் புரட்டிப்பார்த்துக் கொண்டிருக்கத்தான் தெரியும் உமக்கு. எதோ, என்னே மிதக்கவிடுமே பார்ப்போம்.

சோம:— நீர் ஜபத்தை விட்டுவிட்டு எழுந்து நின்று கச்சை கட்டிக் கொண்டு என்ன செய்துவிட்டீர்! ஜபத்துக்கு ஜபமும் போச்சு—

வாஜ:— எல்லாம் உம்மாலேதான். ஆனல் உம்ம ஜபத்தைவிட என்னுடையது ஒன்றுங் கெட்டுப் போகல்லே. கை ருத்ராட்சத்தை உருட்டறது; வாய்என்னேடு சண்டை செய்யறது; மனசோ எண்ணுயிரம் எண்ணங்களே எண்றது. வேஷமென்னமோ பலமாத்தானிருக்கிறது.

சோம:— குலம் கெட்டுப் போகல்லே பாருங்கோ.

வாஜ:— உம்ம குலத்தைபோய் குப்பையிலே போடுங்காணும். பகவான் இப்பொழுதுதானே அர்ஜுனனுக்கு உபதேசம் பண்ணுர்:- குணம் பெரிசு கர்மம் பெரிசுன்னு.

சோம:— அப்படியானு துரோணர் பிராமணரா, க்ஷத்திரியரா?

வாஜ:— வீட்டிலே பிராமணர்; யுத்தகளத்தில் க்ஷத்திரியர்.

சோம:— தர்க்கம் வாசித்ததன் பயன் என்னடான்னு, இந்த மாதிரி விபரீத வியாக்கியானம் பண்றதுக்குத் தெரிஞ்சுது. இப்படித்தான் குலம், கோத்திரம், ஜாதி, ஆசாரம் எல்லாம் கெட்டுப்போச்சு. இல்லாதெ போனா, இந்த மாதிரி அண்ணன் தம்பிகளுக்குள்ளே பிரமாதமா சண்டை ஏற்படுமோ? பாட்டனுக்கு பேரனோடு சண்டை! அப்பனுக்கும் பிள்ளைக்கும் சண்டை!

வாஜ:— ஓய்! சும்மா பேசாதேயும். தர்மத்திற்காக சண்டை போடவேண்டியதுதானே. யாராயிருந்தா என்ன?

சோம:— ஆமாங்காணும். துரோணர், கிருபர், அசுவத்தாமா இவாளெல்லாம் வில்லை பிடிச்சுண்டு சண்டை போடறது ரொம்ப தர்மந்தான். பேசாதே தலைமேலே துணியைப் போட்டுக் கொண்டு தட்சணத்திற்குப்போய் விடலாம்.

வாஜ:— அங்கேயிருந்து வந்திருக்கப்பட்ட ஆட்களைப் பார்த்து இந்த எண்ணம் உதிச்சாபோலே இருக்குது.

சோம:— பாண்டவ சேனைக்கும் கௌரவ சேனைக்கும் சாப்பாடு போட்றதுக்காக, திராவிட தேசத்திலுள்ள ராஜாக்கள் ளாம் சேர்ந்து ஒரு சேனையை அனுப்பிச்சு இருக்கா பாருங்கோ; இந்த ஒருசின்ன விஷயத்தைக் கொண்டே அவாளுடைய தாராளமனசு நன்னா தெரியறது பாருங்கோ.

வாஜ:— ஆமாம்; இங்கே தர்மம் கெட்டு போச்சுன்னு போறேளா, இல்லை, அங்கே தர்மஸ்தாபனத்துக்கும் போறேளா?

சோம:— இரண்டுத்துக்கும்தான்.

வாஜ:— இதோபாருங்கோ, இப்பவே சொல்றேன்; கேளுங்கோ. 'சுதேசம் சுபிட்சம் சுகம்' என்றதுபோல, இங்கேயிருக்கிற சௌக்யம் அங்கே வராது. பாஷை, ஆசாரம் எல்லாம் வேறு.

சோம:— அதெல்லாம் ஒண்ணும் கஷ்டமில்லேன்னு. ஏற்கனவே உத்தர தேசத்திலிருந்து அநேகம் பேர் அங்கே போயி

204



ருக்காளாம். அங்கே யிருக்கப்பட்ட ராஜாக்கள்ளாம், நம்மைப் போலொத்தவாளே ரொம்ப நன்ன ஆதரிச்சு சன்மானம் பண்றளாம். அங்கே யிருந்து வந்திருக்கப் பட்டவாளுடைய முகத்தை பார்த்தாலே அவா பெரிய மனசு பளிங்குபோலே விளங்கறது. என்ன கம்பீரம் ! என்ன நிதானம் ! அவாளே பார்த்தால், அவா தேசத் தையும் பார்க்கணும்னு ஒரு எண்ணம் உதிக்கிறது. சாதாரண யுத்த வீரர்களே இப்படியிருந்தால் ராஜாக் கள்ளாம் எப்படியிருப்பா பாருங்கோ! நாமே ஊகிச்சுக் கொள்ள வேண்டியதுதான்.

வாஜ:— உமக்கென்னமோ தட்சண பதத்து பிரமை பிடிச்சி ருக்கு. அந்த சுகத்தையும் ஒரு தடவை பார்த்துடும். சரி, நான் வரேன்; தட்சணம், தட்சிணை என்று சொல்லி ஆற்றங்கரையிலேயே ஜபம் செய்து கொண் டிரும். [போக முயல்கிறார்]

சோம:— ஓய் ! ஓய் ! இப்படி பாருங்காணும்; தட்சண தேசத்து வீரர்கள் இரண்டு பேரு இதோ வரா பாருங்கோ.

[இரண்டு தமிழ் நாட்டுப் போர் வீரர்கள் பிரவேசிக் கிறார்கள்]

இரு. போ. வீ:—ஐயன்மீர்! வணக்கம். [வணக்கஞ் செலுத்துகிறார்கள்]

சோம:— [எழுந்து] அடடா! என்ன பவ்யம்! என்ன மரியாதை! தீர்க்காயுஷ்மான் பவ!

வாஜ:— நீங்கள் தென் தேசத்திலிருந்து வந்திருக்கப்பட்ட வாளோ?

மு. போ. வீ:—ஆம் ஐய, பாரதப் போரினில் அரும்பணியாற்று வான்வேண்டி எமது கொற்றவனால் ஈண்டு அனுப்பப் பெற்றோம். காலைக்காற்றும் இவ்வாற்று நீரும் எம்மை இங்கு ஈர்த்தன.

வாஜ:— ஹரிஹரி! இவா பேசர பாஷையைப் பார்த்தேளா? அங்கே போனா திண்டாடவேண்டியதுதான் நீர்!

சோம:— உங்க தேசம் ரொம்ப சுபிட்சமான தேசந்தானே?

மு. போ. வீ:—அந்தணர் பெரும! [பாடுகிறான்]

காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதியென
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ் நாடு.
முத்தமிழ் மாமுனி நீள்வரையே—நின்று
மொய்ம்புறக்காக்குந் தமிழ் நாடு—செல்வம்
எத்தனையுண்டு புவி மீதே—அவை
யாவும் படைத்த தமிழ் நாடு.

சோம:— பேஷ்!

வாஜ:— இங்கேயுள்ளதைப் போலவே அங்கேயும் பெரிய வித்துவான்கள், எங்களைப்போன்ற பிராமணர்கள், இவாளுக்கெல்லாம் ராஜாவின் ஆதரவு இவைகளெல்லாம் இருக்கோ?

சோம:— [தனக்குள்] சுவாமிகளுக்கு இப்பொழுதுதான் சுவாரஸ்யம் தட்றது. நாக்கிலே ஜலம் சொட்றது. கேளுங்கோ! கேளுங்கோ!

மு. போ. வீ:–அறவோர்க்கு வரையாது வழங்கும் வள்ளற்றன்மை பெற்றது எங்கள் நாடு. மன்பதையின் இன்பத்திலே மன்னர் தம் மணிமுடிகள் அணி பெறுவது எங்கள் நாடு. வாணிபத்தால் நானிலத்தை வாழ்விப்பது எங்கள் நாடு.

இ. போ. வீ:—அதுமட்டுமல்ல, நாங்கள்—( பாடுகிறான் ]

ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்
ஆலைகள் வைப்போம் கல்விச்சாலைகள் வைப்போம்
ஓயுதல் செய்யோம் தலை சாயுதல் செய்யோம்
உண்மைகள் சொல்வோம் பல வண்மைகள்
[செய்வோம்
காவியம் செய்வோம் நல்ல காடு வளர்ப்போம்
கலை வளர்ப்போம் கொல்லர் உலை வளர்ப்போம்
ஓவியம் செய்வோம் நல்ல ஊசிகள் செய்வோம்
உலகத் தொழிலனைத்தும் உவந்து செய்வோம்.

சோம:— என்ன வாஜபேயர்வாள்! என்ன சொல்றேள் இப்பொழுது?

வாஜ:— நல்ல தேசந்தான் போலத் தோன்றது. [படை வீரர்களைப்பார்த்து] எங்க தேசத்து வாளே, இதுக்கு முன்னே எங்கேயாவது பார்த்திருக்கேளா?

இ. போ. வீ:—வெஞ்சிலை வீரர் விறல்விசய னென்பார் தமது மாபெருந் தானேயுடன் எமது நாட்டின் வழியாகவே சமீபத்தில் சென்றார். அதுமுதல் இந்நாட்டையும் இந் நாட்டு மக்களையும் காணவேண்டுமென்ற ஆவல் எமக்கு ஏற்பட்டது.அந்த ஆவல்எமது மன்னரின் ஏவலால் இது காலை நிறைவுற்றது. உங்களது மொழியிடத்து அழி வுறாக்காதல் எங்களுக்கு ஏற்பட்டுவிட்டது. சேய்மை யிலுள்ள இமயமலையும் அண்மையிலுள்ள இவ்வாறும் எங்களைப் பெரிதும் கவர்ந்து விட்டன. வடநாடும் தென்னாடும் ஏன் இனித் தனித்தனியாக இருத்தல் வேண்டும் என்ற கேள்வி அடிக்கடி எங்கள் உள்ளத் திலே பிறக்கிறது.

சோம:— அப்படியானா எங்களைப் போலொத்தவா அங்கே வரத் துலே எவ்விதஆட்சேபமும் இராதுன்னு சொல்றேள்?

மு. போ. வீ:—இஃதென்ன இப்படிக் கேட்கிறீர்கள்? கற்றோர்க் குச் சென்ற விடமெல்லாம் சிறப்பன்றோ? தவிர, விருந்தினரின் உள்ளத்தைத் தண்ணெனச் செய் வதில் தமிழர்கள் தலை சிறந்தவர்கள்.

வாஜ:— பார்த்தீர்களா சுவாமிகளே ! அங்கே போனா ஜலரூபந் தான் நீங்கள். அவ்வளவு வெயில் போலே இருக்கு அங்கே. தண்ணியா பூடுவேள் என்று சொல்றா பாருங்கோ.

மு. போ. வீ:—[நகைத்து] அப்படியில்லை; விருந்தினரின் மனம் திருப்தியடையுமாறு நடந்து கொள்வோம் என்று சொன்னேன்.

வாஜ:— அப்படியா!

சோம:— உம்ம தர்க்க ஞானம், குதர்க்கத்திலே தான் போறது. சரி, போலாம் வாரும். ஆத்திலே போய் விஷயங்களைச் சொல்வோம். பொம்மனாட்டிகள் என்ன சொல்றான்னு பார்ப்போம்.

வாஜ:— எங்காத்திலே அதெல்லாம் ஒண்ணும் நடக்காது. அன்னெக்கி, துரியோதன சபையிலே துரோபதைக்கு அவமானம் நடந்தது பாருங்கோ, அது முதல், புருஷாளைக் கண்டாலே—அதெல்லாம் வெளியே சொன்னா வெட்கக் கேடு. வாருங்கோ போகலாம்; நாழியாச்சு. [தமிழ் வீரர்களைப்பார்த்து] ஐயா, நாங்கள் போய்ட்டு வரோம். மறுபடியும் உங்களைப் பார்க்கிறோம். எங்கே பார்க்கலாம் உங்களை ?

சோம:— அவா தங்கி யிருக்கப்பட்ட இடத்திலே போய் பார்த்தா தெரியாது; அவாளை இப்போ தொந்தரவு பண்ணுவானேன் ?

வாஜ:— அதுவுஞ் சரி. நாங்கள் போய்ட்டு வரோம்.

[செல்கிறார்கள்]

மு. போ. வீ:—இவ்வாற்றங் கரையில் சிறிது அமர்ந்து செல்வோமா ?

இ. போ. வீ:—ஆம்.

[காட்சி முடிகிறது]

—∞✻∞—

## நான்காவது களம்.

இடம்:— பாண்டவர் பாசறையைச் சேர்ந்த அந்தப்புர உத்தியான வனம்.

காலம்:— காலை.

[உத்தரை ஊஞ்சற் பலகையில் ஆடிக் கொண்டிருக்கிறாள்; அபிமன்யு வந்தவுடன் நிறுத்தி விடுகிறாள்]

அபிமன்யு:—உத்தரே ! ஏன் நிறுத்தி விட்டாய் ? நீ ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருப்பது கரிய மேகத்திலே மின்னற் கொடி தோன்றி மறைவதுபோல் இருக்கிறது.

உத்தரை:—எனக்கு வேண்டாம் இந்த வர்ணனை! [முகத்தைத் திருப்பிக் கொள்கிறாள்]

அபி:— என்ன கோபம் என் மீது?

உத்:— ஆமாம். புருஷர்கள் எப்பொழுதும் சுயநலப் பிரியர்கள். தங்களுக்கு ஏதேனும் காரியம் ஆக வேண்டுமானால் ஸ்திரீகளை ஸ்தோத்திரம் செய்வது; இல்லாவிட்டால் அடியோடு அவர்களை மறந்து விடுவது.

அபி:— [நகைத்து] கோபத்திலே கூட நீ சோபிக்கிறாய். உன் நெற்றியிலே புருவம் ஏறுவது இந்திரன் வில்லிலே நாண் ஏறுவது போலிருக்கிறது.

உத்:— [எழுந்து சிறிது ஒதுங்கிப்போய் திரும்பி நிற்கிறாள்]

அபி:— [உத்தரையின் சமீபம் சென்று தோளின் மீது கைவைத்து] உத்தரே!

உத்:— என்னைத் தொடவேண்டாம். இரண்டு நாட்களாக மறந்திருந்த உத்தரை இன்று மட்டும் வேண்டியிருக்கிறது.

அபி:— இல்லை கண்ணே! வேலை மிகுதியால் வர முடியவில்லை. உன்னை நான் எப்படி மறக்க முடியும்? மறந்து எப்படி இருக்க முடியும்? என் உள்ளக் கோயிலிலே வைத்துப் பூசிக்கப்படும் தேவியல்லவோ நீ!

உத்:— ஆமாம்! நீங்கள் நல்ல பூசாரிதான். [இருவரும் ஊஞ்சலில் அமர்கிறார்கள்.] இரண்டு நாட்களாக உங்களைப் பாராமல் நான்படும் வேதனை எனக்கன்றோ தெரியும்! நீங்கள் அலட்சியமாக வில்லென்றும் அம்பென்றும் சிந்தித்துக் கொண்டு ரணரங்கத்திலேயே ஐக்கியமாகி விடுகிறீர்கள். நான் இங்கே தனிமையில் பெருமூச்சு விட்ட வண்ணம் கண்ணீரால் தங்கள் உருவத்திற்கு அபிஷேகம் செய்துகொண்டே விஜய லட்சுமியைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான். இதுதான் நீங்கள் என்மீது வைத்திருக்கும் பிரேமை! [அழத்தொடங்குகிறாள்.]

அபி:— அழாதே! யுத்தகளத்தில் க்ஷத்திரியர்கள் தங்கள் கடமையைச் செய்ய வேண்டாமா? க்ஷத்ராணிகள், தங்கள் ஆடவர்களுடைய வெற்றியையன்றே பிரார்த்தித்துக் கொண்டிருக்க வேண்டும்?

உத்:— போங்கள் பிராணநாதா! தாங்கள் எப்பொழுதும் என்னிடத்திலேயே இருக்கவேண்டும்.

அபி:— உன்னிடத்திலே யென்ன, உன்னுள்ளத்திலேயே நான் இருக்கிறேனே!

உத்:— ஆமாம்; இந்த இடத்தைவிட்டு நீங்கள் இனி எங்கேயும் போகக் கூடாது.

அபி:— யுத்தம் முடிந்த பிறகு உன் உத்திரவுபடியே நடந்து கொள்கிறேன்.

உத்:— அதுவரையில்—?

அபி:— [பொறுத்து] உத்தரே! இன்று நான் அதிக நேரம் இங்கே தங்கியிருக்க முடியாது.

உத்:— ஏன்?

அபி:— இன்று நான் பாண்டவ சேனதிபதியாக நியமிக்கப் பட்டிருக்கிறேன். தகப்பனர் இல்லாதகாலத்துத் துரோணுசாரியாரால் வகுக்கப்பட்டுள்ள சக்ர வியூகத்தை உடைத்தெறிய, யுதிஷ்டிருடைய ஆக்ஞையையும் ஆசீர்வாதத்தையும் பெற்றிருக்கிறேன்.

உத்:— பிராணநாதா! [கண்ணீர் விடுகிருள்]

அபி:— உத்தரே! இஃதென்ன? உன் கமல நேத்திரத்திலே பனித்துளிபோல் கண்ணீர்? நீ வீரபத்தினியல்லவோ?

உத்:— பிரியதம! நீங்கள் இன்று யுத்தத்திற்குப் போக வேண்டாம். வேண்டாம்—இதோ! என்னைப் பார்த்துச் சொல்லுங்கள். நீங்கள் சொல்லும்போதே என் இருதயத்தில் அந்தகாரம் சூழ்ந்துகொண்டுவிட்டது; அடிவயிற்றிலே துக்க அலை மோத ஆரம்பித்து விட்டது. இருங்கள்—[பொறுத்து] ஐயோ! எனது வலது கண் துடிக்கிறதே!—என்ன இருட்படலம்—! வேண்டாம்

பிராண நாதா! இந்த அபசகுனத்துடன் நீங்கள் யுத்தத்திற்குப் போக வேண்டாம்.

அபி:— பிரியே! ஏன் இப்படி அஞ்சுகிருய்? யுத்த களத்தில் கோழைகளன்றோ சகுனம் பார்ப்பார்கள்? வெற்றியோ தோல்வியோவென்று கவலைப்படுவார்கள்?

உத்:— ஆயினும் என் மனம் கேட்கமாட்டேனென்கிறதே.

அபி:— உத்தம க்ஷத்திரிய வமிசத்திலே பிறந்த நீ இப்படி ஏக்கங்கொள்ளலாமா? க்ஷத்திரியர்கள் நிம்மதியாக நித்திரை புரிய வேண்டிய இடம் சமர்க்களம் அல்லவோ?

உத்:— ஐயோ! பிராண நாதா! பிராண நாதா!

அபி:— பிரியே! உள்ள நிலைமை அறியாமல் நீ இப்படிக்கலங்குகிருய்? சம்சப்தகர்களோடு போர் புரிய வேண்டி,மாமா கிருஷ்ணருடன் பிதா சென்றிருக்கிருர். சக்ரவியூகத்தை நான் தவிர வேறெவரும் உடைத்தெறிய முடியாது. இந்த நிலைமையில் என் கடமை என்ன? காதல் மேடையில் களி நடனம் புரிந்துகொண்டிருப்பதா?

உத்:— இல்லை பிராண நாதா!

அபி:— அப்படியானல் சந்தோஷமாக விடை கொடு. என்னலே பாண்டவ சேனை தோல்வியடையவேண்டுமென்று நீ விரும்புகிருயா?

உத்:— நான் அப்படி விரும்புவேனு?

அபி:— பிறகு ஏன் நீ கலங்குகிருய்?

உத்:— என்னையும்கூட அழைத்துச் செல்லுங்கள்.

அபி:— [நகைத்து] நன்ருயிருக்கிறது நீ கூறுவது! ஆடவர்களோடு பெண்கள் யுத்த களத்திற்கு வருவதா? பிணக்குவியல்களும், இரத்தப் பெருக்கமும், கழுகுகளின் இரைச்சலும் எவரையும் கதி கலங்கிடச் செய்யுமே.

உத்:— ஆரியாவர்த்தத்திலே ஸ்திரீகள் தங்கள் கணவன்மார்களுக்கு யுத்த களத்தில் பலவித உதவிகளைச் செய்

திருப்பதாகச்சரித்திரங்கள் கூறுகின்றனவே. சம்பராசுர யுத்தத்திலே தசரதருக்குக்கைகேயி உதவிபுரியவில்லையா?

அபி:— அந்த வீர பத்தினிகளின் தியாகம் ஆரியாவர்த்தத்தின் இதிகாசத்திலே எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். ஆனால் அவர்கள் நிலைமை வேறு. இப்பொழுது நீ யுத்த களத்தின் கோரக் காட்சியைக் காணக்கூடாத நிலைமையிலிருக்கிறாய். அதனைப் பார்த்து உன் மனம் கலக்கமடையுமானால் உனக்கு தேக நலிவு உண்டாகி நமது பிற்கால வாழ்விற்குப்பங்கம் ஏற்படக் கூடும். ஆதலின் அந்த எண்ணத்தை நீ மறந்துவிடு.

உத்:— ஆனால், தாங்களும் யுத்தத்தை மறந்து விடுங்கள்.

அபி:— என்ன இது? உத்தரே! வீரர் குலத்திலே உதித்து, வீர புத்திரனை மணந்து, வீர மாதாவாக விளங்க வேண்டிய நீ,வீரர் கடமையினின்று என்னைத்தடுக்கலாமா? அமர்க்களத்திலே அமரரும் ஆரியரும் அறிய, எனது பிதா தர்ம புத்திரருடைய சந்நிதானத்தில் நான் செய்து கொண்ட பிரதிக்ஞையை உன் பிரேமையினால் பங்கப் படுத்த விரும்புகிறாயா? எனது க்ஷத்திரிய தர்மத்தை உனது கண்ணீரினால் கரைத்து விடுவதில் உனக்குத் திருப்தியா? அர்ஜுனன் இல்லாத காலத்து அவனுடைய மகன் பாண்டு வமிசத்திற்கு இழிவு தேடி வைத்தானென்று பிற்கால சந்ததியார் பழி கூறுவாராகில் அஃது உன்னைச் சாராதா?

உத்:— [பொறுத்து] பிரதிக்ஞை செய்திருக்கிறீர்களா? அப்படியானால் அதனின்றும் மாறவேண்டாம். பெண்களின் பவித்ரமான பிரேமையிலே தெய்விக சக்தியில்லையென்று உலகம் எல்லாம் சேர்ந்து உத்கோஷித்த போதிலும் தாங்கள் க்ஷத்திரிய தர்மத்தை, செய்து கொண்ட பிரதிக்ஞையைக் கைசோர விட வேண்டாம்.

அபி:— அப்படியானால் சிரித்த முகத்துடன் எனக்கு விடை கொடு.

உத்:— என் மனம் கலங்குகிறதே.

அபி:— ப்ரியே! யுத்த களத்திலிருந்து வெற்றி மாலையுடன் விரைவினில் உன்னிடம் வந்து சேருகிறேன். நீ கவலைப் படாதே. உன்னுடைய பவித்ரமான பிரேமையானது ரண களத்தில் எனக்கு ரக்ஷையாக இருக்கும். பகவான் கிருஷ்ணர் நமது பக்கம் இருக்கும்போது நம்முடைய சத்துருக்கள் எப்படி உயிரோடு வாழ்ந்திருக்க முடியும்? கவலைப்படாமல் தைரியமாய் இரு. என்னுடைய பிரி வாற்றுமையில் மாதா சுபத்திரையின் வாத்ஸல்யம் உன்னைக் காத்து நிற்கும். [யுத்த கோஷம் கேட்கிறது] அதோ! வீர பேரிகை. மாதாவிடம் விடை பெற்றுக்கொண்டு விரைவிலே செல்ல வேண்டும். உத்தரே! உன்னுடைய பதி பிரேமையிலே என்னுடைய வெற்றியிருக்கிறது. நான்வரட்டுமா? [பொறுத்துத் திரும்பிப் பார்த்து] அதோ மாதாவே வந்து விட்டனரே!

[சுபத்திரை பிரவேசிக்கிறாள்]

அபி:— அம்மா! நமஸ்காரம். [வணங்குகிறான்]

சுபத்திரை:—[சிரசிலே கரம் வைத்து] அப்பா! சிரஞ்சீவியாய், வீரர்களின் ஜோதியாய் விளங்குவாயாக.

அபி:— தங்கள் பாத தூளி என் சிரசிலே இருக்கும் வரை எனக்கு என்ன குறை யம்மா!

சுப:— மகனே! பாண்டவர்கள் முன்னிலையில் நீ ஏதோ பிரதிக்ஞை செய்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அஃதென்ன?

அபி:— ஆம் அம்மா! பிதாவின் நற்பெயரைப் புத்திரன் காப்பாற்ற வேண்டாமா ?

சுப:— உன்னுடைய பெரிய தகப்பனர் உனக்கு அநுமதி அளித்துவிட்டாரா?

அபி:— மிகுந்த மகிழ்ச்சியுடன். இதோ,உத்தரையின் உத்திரவும் பெற்றுவிட்டேன்.

சுப: — [உத்தரையைப் பார்த்து] உத்தரே! சாதாரண அபலைகள் மாதிரி இந்தச் சமயத்தில் கண்ணீர் விடாதே. என்னு

டைய புத்திரனுக்கு மாலையிட்ட பிறகு உனக்கென்ன குறை? [பொறுத்து அபிமன்யுவைப் பார்த்து] குமாரா! மகாவீரரும், நிறைந்த அநுபவமுடையவருமான துரோணாசாரியார் வகுத்துள்ள சக்ரவியூகத்தை உன்னால் உடைத்தெறிய முடியுமா? உன் பிதாவும் இங்கு இல்லையே. அவரன்றி வேறு யாரால் சக்ரவியூகத்தை உடைத்தெறிய முடியும் ?

அபி:— என்னால் முடியும் அம்மணி! நான் அர்ஜுன மகாராஜருடைய புத்திரனல்லவா ?

சுப:— ஆயினும் மிகக் கடினமாயிற்றே.

அபி:— மிகச் சுலபமம்மணி. பாரத தேசத்திலே பிறந்து, சிந்து நதியின் நீரைப்பருகி, இமயவெற்பின் காற்றை நுகர்ந்த நான் இந்தச் சாதாரண யுத்தத்தில் பின் வாங்கினால் உலகம் என்னை என்ன சொல்லும்? ப்ரஹ்மா வர்த்தத்தின் பிற்கால சந்ததியார் என்னை ஏசிப்பாடமாட்டார்களா? இந்தப் பரிகாசத்திற்கு இடமளிக்க நீங்கள் விரும்புகின்றீர்களா ? வீர மாதாவான தங்களுடைய உதரத்திலே உதித்து, பாண்டவர்களின் ஆனந்த பாஷ்பத்திலே வளர்ச்சியடைந்த நான் கோழையாகிப் புழுத்த புழுவைப்போல் தங்கள் பக்கத்தில் எப்பொழுதும் நெளிந்து கொண்டிருப்பதைக் காண விரும்புகின்றீர்களா? அல்லது க்ஷத்திரியர்களின் பரம்பரையான தர்மப்படி ரணகளத்தில் சத்துருக்களையெல்லாம் ஒரு கணத்தில் பிணமலையாக்கி அதன் அடியிலே நான் மடிந்து கிடப்பதைக்காண விரும்புகின்றீர்களா ? [பொறுத்து] அம்மணி! ஏன் தயங்குகிறீர்கள்? தங்களுடைய தூய்மையான தாய்மைக்கு எங்கே என்னுடைய தோல்வியினால் களங்கம் உண்டாகப் போகிறதோ என்று சிந்திக்கிறீர்களா? இந்தச் சிந்தனையின் பயனாக, என்னைப் போருக்கு அனுப்ப மறுத்துவிடுவீர்களாயின், இந்த வாள் கொண்டு என்னை இங்கேயே வெட்டி வீழ்த்திவிடுங்கள். இதற்கு மனமிசையாவிட்

டால், தங்களுடைய சந்நிதானத்தில் தலைவணங்கி நிற்கும் இந்தச் சிரத்தை, இந்தத் தாள் கொண்டு மிதித்துத் தரையோடு தரையாகத் தேய்த்துவிடுங்கள்.

சுப:— அந்தத் துர்ப்பாக்கியம் நேரிடாதபடி என்னையும் உன்னையும் தேவர்கள் காப்பார்களாக! [பொறுத்து] அபிமன்யு! இனியும் தாமதியாதே. இதோ, வீரதிலகம் இடுகிறேன். [நெற்றியில் திலக மிடுகிறாள்] என்னுடைய கண்ணீரினால் குழைத்து இந்தத் திலகத்தை இடுகிறேனென்று நினையாதே. இதில் உன் மாதாவின் பெருமை நிரம்பியிருக்கிறது; அவளுடைய பிற்காலக் கீர்த்தி அடங்கியிருக்கிறது. மகனே! யுத்தகளத்தில் இந்தத் திலகம் உனக்கு ரக்ஷையாக இருந்து காப்பாற்றும். தாயன்பானது உனக்கு வழி காட்டிச் செல்லும். ஆனால் நீ க்ஷத்திரியர்களின் கடமையினின்று விலகிச் செல்லாதே. சத்ருக்களின் அஸ்திரங்களுக்கு உன் மார்பகத்தைத் தஞ்சமாகக் கொடு. ஆனால் காயமடைந்த சிங்கம்போல், முதுகிலே காயங்களுடன் இந்தப் பாசறையை நோக்கி வருவாயாகில், அந்தப்புரச் சேடியரும் உன்னைக் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டார்கள். நமது மூதாதையர்கள் ஒருங்கு சேர்ந்து, சாபமும் கோபமும் நிறைந்த கோஷத்துடன் உன்னை நரகவாயிலுக்கு அழைத்துச் செல்வார்கள். [பொறுத்து] மகனே! பாண்டவர் குலப்பெருமையாக, காண்டீவதாரியின் பிரதிநிதியாக, யுத்தகளத்திற்குச் செல்கிறாய் என்பதை ஞாபகப் படுத்திக்கொள். வெற்றி மாலை யணிந்து விஜய கோஷத்துடன் விரைவினில் திரும்பி வா. [அபிமன்யு வணங்குகிறான். சுபத்திரை ஆசீர்வதிக்கிறாள்]

[காட்சி முடிகிறது]

---

# இரண்டாம் அங்கம்

## முதற் களம்

இடம்:— அஸ்தினபுரத்தில் சோமயாஜுலுவின் வீடு

காலம்:— காலை.

[சோமயாஜுலு கறிகாய்கள் நறுக்கிக்கொண்டிருக்கிறார். அவர் மனைவி சமைத்துக் கொண்டிருக்கிறாள்]

சோம:— கடைசிலே என்ன சொல்றே நீ தட்சண தேச யாத்திரையைப்பத்தி? எனக்கென்னமோ போகணுமின்னு இருக்கு.

சோ. மனைவி:—[முகத்தைச் சுளித்துக்கொண்டு] ஆமாம்; உள்ளூரிலே உழாத கடா வெளியூரிலே நாட்டியம் ஆடப்போச்சாம்!

சோம:— [திடுக்கிட்டு] த்ஸ! அப்படியானா நான் என்ன கடாவா? [பொறுத்துப் பல்லிளித்து] அதுக்கில்லேன்னா, அங்கே போனா கொஞ்சம் சௌகரியமா யிருக்குமோன்னுதான் சொல்றேன்.

சோ. ம:—ஆமாம், சௌகரியந்தான்! மூட்டை சுமக்கிற கழுதை சங்கீதங் கேட்கப் போச்சாம்!

சோம:— பேஷ்! கடாவிலிருந்து கழுதையாகி நாட்டியத்திலிருந்து சங்கீதமாச்சா! நன்னாயிருக்கு! புருஷாளுக்கு நல்ல கௌரவம்!

சோ. ம:—பொம்மனாட்டிகளுக்கு புருஷாள் ரொம்ப கௌரவம் வைச்சிருக்கா. ஐயய்யோ, பொம்மனாட்டிகள் முகத்திலே முழிக்கிறதுக்குக் கூட உங்களுக்கு மனசு வராதே.

சோம:— இரு, இரு; என் இப்படி அபாண்டமா பழி சொல்றே? புருஷாள் என்ன பண்ணிப்புட்டா அப்படி?

சோ. ம:—என்ன பண்ணிப்புட்டாளா! ஒண்ணும் பண்ணல்லே; சும்மா பார்த்திண்டிருந்தா; ஆந்தை மாதிரி முழிச்சுண்டிருந்தா.

சோம:— என்னதான் சமாசாரம் சொல்லேன்?

சோ. ம:—அன்னிக்கு துரியோதனன் சபையிலே துரோபதைக்கு அவமானம் நடந்ததே, அப்போ புருஷாள்ளாம் என்ன பண்ணு? வாயை மூடிண்டு உட்கார்ந்திருந்தா. எல்லாருக்கும் வாயே அடைச்சு போச்சு. அப்போ ஒத்தராவது எழுந்து, ஒருபொம்மனுட்டியே இப்படி மானபங்கம் படுத்தலாமான்னு விரலே தூக்கணுமே. எல்லாரும் அம்மா வயத்திலே பிறக்கலே, கூடப்பிறந்தவா சேரப் பிறந்தவாளோடு வாழல்லே. ஒரு பொம்மனுட்டி தனியே இத்தனே பேர் மத்தியிலே ஆப்டுண்டு என்ன பாடு பட்டாடி யம்மா! போரும் இந்த பொம்மனுட்டி ஜன்மம்!

சோம:— இதோ பாரு, வெறுமனே பேசாதே. எங்கேயோ ஏகதேசமா ஒருவிஷயம் நடந்துட்டுதான்——அதைப்பத்தி என்னமோ பிரமாதப் படுத்தரே.

சோ. ம:—ஏகதேச மின்னு? இந்த மாதிரி அக்கிரமங்கள் நடந்துண்டு வரதுனலேதான் பங்காளிகளுக்குள்ளே பிரமாதமா சண்டே நடக்கிறது.

சோம:— இதோ பார்; ஊர் வம்பெல்லாம் வாண்டாம். நீ வரயா இல்லேயா? [கதவைத் தட்டுகிற சப்தம் கேட்கிறது] இதோ பார், யாரோ கதவை தட்ரா.

[சோமராஜுலு மனைவி சென்று கதவைத் திறந்து விட்டு மீண்டும் வருகிறுள்]

சோ. ம:—யாரோ ராஜ தூதர்கள் போலிருக்குது.

சோம:— [பயந்து எழுந்த வண்ணம்] யாரு, யாரு?

[இரண்டு இராஜ தூதர்கள் பிரவேசிக்கிறுர்கள்]

முதல் தூதன்:—ஐய, துரியோதன மகாராஜர் இன்று கூட்டும் சபையில் தாங்கள் பிரசன்னமாயிருக்க வேண்டுமென்பது ராஜாக்ஞை.

சோம:— என்னேயா? என்னேயா? [பயத்தினுல் மிரள மிரள விழிக்கிறுர்]

சோ. ம:—இவாளே இராது. வேறு யாரையாவது கூப்பிடச் சொல்லியிருப்பா.

சோம:— ஆமாம் ஆமாம். நன்னு யோசனை பண்ணி பாருங்கோ. ஞாபக மறதியா இந்த கிருகத்திலே வந்து நுழைஞ்சுட்ருப்பேள்.

மு. தூ:— வியாகரண வித்துவான் சோமயாஜுலு பண்டிதர் தாங்கள்தானே?

சோம:— ஆமாம்.

மு. தூ:— எங்கள் கடமையை நாங்கள் சரியாகவே செய்தோம்.

சோம:— [மெதுவாக] என்ன சமாசாரம்?

மு. தூ:— தெரியாது.

சோம:— அடே! ரொம்ப முடுக்கா பதில் சொல்றேளே. சொல்லாப்பட்டா போங்களேன். போங்கய்யா போங்க! மிஞ்சினு சிரசாக்கினைதானே! அதுக்கு மேலே ஒண்ணும் பண்ணிவிட முடியாதே.

சோ. ம:—ஐயையோ—என்ன ஆத்திரம்—என்ன ஆத்திரண்டியம்மா! மெதுவா பேசித் தொலைக்கக்கூடாதா?

சோம:— என்னு முழிச்சு பார்க்கேள் முள்ளம் பன்றி மாதிரி?

சோ. ம:—[இராஜ தூதர்களைப் பார்த்து] ஐயா! அவர் ஏதோ தெரியாமல் சொல்கிறார். நீங்கள் போங்கள்.

சோம:— பின்னே என்னு? பொம்மனாட்டிகள் ஏதோ ஆத்திலே பேசிண்டிருந்தா அதைப்போய் பிரமாதமா சொல்லிக் கொடுத்து—

மு. தூ:— ஐயா! வீட்டிலே பெண்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள்?

சோம:— துரோபதையை, அந்த மாதிரி சபையிலே மகாராஜா தம்பி அவமானப் படுத்தினது தப்பு என்று ஏதோ என்னோடு சௌஜன்யமா பேசிண்டிருந்தா அதைப் போய் ராஜாகிட்டே சொல்லிக் கொடுத்திருக்காளே யாரோ இதுக்குள்ளே. அது சம்பந்தமா என்னை விசாரிக்கறதுக்குத் தானே கூப்பிட்றுய்யா ?

சோ. ம:—[கையை நொடித்துக்கொண்டு தனக்குள்] எங்கப்டன் புதி ருக்குள்ளே இல்லேன்னு இப்படிகூட பேத்துவாளோ?

மு. தூ:— எங்களுக்குத் தெரியாது. வேண்டுமானுல் இந்தச் செய் தியை ராஜ சந்நிதானத்தில் சமர்ப்பிக்கிறோம்.

சோம:— அப்படி யெல்லாம் ஒண்ணும் வாணும். நீங்கள்ளாம் பிள்ளை குட்டிகளோடு என்னும் சிரஞ்சீவியா மார்க்கண் டேயாயசா வாழணும். [அருகில் சென்று மெதுவாக] என்ன விஷயம்? இராஜாக்கினை கொஞ்சம் பயமாத் தான்இருக்கு. என்னிடம்இரகசியமாகச்சொல்லுங்கோ.

மு. தூ:— தெரியாத விஷயத்தை எப்படி இரகசியமாகச் சொல் லுவோம் ?

சோம:— யுத்தம் எப்படி நடக்கிறது ? ராஜா பக்கம் ஜயந்தானே ?

மு. தூ:— பிரஜைகளின் விருப்பம் அப்படித்தானிருக்க வேண்டும்.

சோம:— இல்லே—சேனைகள் போர்லேன்னு, எங்களைப்போ லொத்த பிராமணுளை யெல்லாம் சேர்த்து ஒரு படை திரட்டலாம்னுட்டு மகாராஜா உத்தேசமோன்னு கேட் டேன்.

மு. தூ:— அந்த உத்தேச மிருந்தால் அது பாராட்டத் தக்கது தானே.

சோம:— [பயந்து] அப்படியானு நான் யுத்தத்திற்குப் போக ணுமா ? என் ஐயா, போகணுமா ? [மனைவி யருகிற் சென்று] ஏண்டி, நான் சண்டைக்குப் போகணுமா ? ஐயோ நான் சண்டைக்கி போகணுமாடி ?

சோ. ம:—[முகத்தைக் கடுத்துக்கொண்டு தனக்குள்] சண்டேக்கா வது போங்கோ, யமலோகத்துக்காவது போங்கோ.

சோம:— ஐயோ, மாரடைக்கிறதே. யமதூதர் மாதிரி வந்து நிக்க ராளே. [மிக்க பயந்து அங்கு மிங்குமாகச் சென்று] எங்கே யாவது ஓடிப் பூடட்டுமா ? எங்கே போறது?—[இச்ச மயத்தில் ஓர் எலி குறுக்காக வந்து சோமயாஜுலுவின் காலில் ஏறிச் செல்கிறது.] ஐயய்யோ ! பூட்டேன்

செத்து பூட்டேன்!! ஐயோ ! கொன்னூட்டிங்கிளே ! கொன்னூட்டிங்கிளே!! [மூர்ச்சையாகிக் கீழே வீழ்கிறார்]

மு. தூ:— அம்மணி! நாங்கள் சென்று வருகிறோம். ஐயா அவர்களை அவசியம் வரச் சொல்லுங்கள்.

[இராஜ தூதர்கள் செல்கிறார்கள். வாஜபேயர் பிரவேசிக்கிறார்]

வாஜ:— என்ன சமாசாரம்? ஏன் இப்படி பேச்சு மூச்சில்லாமல் கிடக்கிறார்?

சோ. ம:—[வருத்தத்துடன்] என்ன அவஸ்தையோ? அநாவசியமாகப் பயந்துகொண்டுவிட்டார்.

வாஜ:— அடாடா! என்ன அவஸ்தை! ஹரிஹி! சுவாமி சோமயாஜுலுவாள்! ஐயோ! போயிட்டாப்போல இருக்கே. போயிட்டேளா ? போயிட்டேளா ? [உரக்க அழுவது போல் பாசாங்கு செய்கிறார்]

சோம:— [எழுந்து வாஜபேயரைக் கட்டிக்கொண்டு] ஐயா! நான் போயிட்டேனா? ஐயோ! நான் போயிட்டேனே! அடி! நான் போயிட்டேண்டி!

சோ. ம:—[வெறுப்புக் காட்டிக்கொண்டு] நன்னாயிருக்கு ! பித்தம் தெளிய மருந்தொன்று சாப்பிடுங்கோ.

சோ. ம:—அப்படியானா, தட்சணைத்திற்குப் போகலாம் வா.

வாஜ:— அதுக்கா இவ்வளவு ஆர்ப்பாட்டம்!

[காட்சி முடிகிறது]

---

## இரண்டாவது களம்.

இடம்:—குருக்ஷேத்திர யுத்தகளம்.

காலம்:—காலை.

[அபிமன்யு இரதத்திலிருந்த வண்ணம் சக்ர வியூகத்திற்குள் பிரவேசிக்கிறான். யுத்த கோஷம்]

அபிமன்யு:—[இரதத்திலிருந்து இறங்கி தனக்குள்]அரனுடைய வரம் பெற்ற ஜயத்ரதனே மூர்ச்சையாகிவிட்டான்! மற்ற

வர் எம்மாத்திரம்? நூற்றுவரிலே ஒருவர்கூட அகப் படவில்லையா இந்த வாயில் காக்கும் வேலைக்கு? சிந்து நாட்டு வேந்தன் வீழ்ந்து விட்டதைக் கண்டு சேனைக ளெல்லாம் கலங்கியோடுகின்றன. [எதிரில் யுத்தகோஷம். திரும்பிப்பார்த்து] இதுயார்? ஆசாரியாரா? பிதாவுக்குப் படைக்கலப்பயிற்சியளித்த பெருமான் என் மீது போர் தொடுக்கவந்திருக்கிறுரா? [பொறுத்து] அடிகாள் ! அபி மன்யு வணக்கம். [அம்பெய்கிறுன்.]

[துரோணுசாரியார் இரதத்தோடு பிரவேசிக்கிறுர்]

துரோ:— அன்பைப்புகுத்தி அம்பைச்செலுத்தும் ஆற்றல்படைத்த அர்ஜுனன் மகன் அபிமன்யு அமரனுய் வாழட்டும். குமாரா! நீயே தந்தைக்குத் தக்க மைந்தன்.

அபி:— ஆசாரியார் ஆசீர்வதிக்க வந்திருக்கிறுரா? அல்லது அபி மன்யுவின் ஆண்மையைப் பரிசோதனை செய்ய வந்தி ருக்கிறுரா?

துரோ:— குமாரா! சக்ரவியூகமென்னும் இந்தப் பயங்கரப் படுகுழி யிலே தெரியாமல் வந்திறங்கி விட்டாய். விரைவிலே இதனினின்றும் வெளியேறிச்செல்.

அபி:— என்னுடைய பணிவுக்கு இந்தக் கனிவை நான் எதிர் பார்க்கவில்லையே. "அமர்க்களத்திலே அமரர் கோன் வந்தெதிர்த்தபோதிலும் அடர்ந்து பொருவதே ஆண் மைக் கழகு" என்ற தங்களுடைய உபதேசத்தையே என் பிதா எனக்கு இளமையில் ஊட்டி வளர்த்தார். என்னுடைய வளர்ச்சியில் தங்களுக்கு உண்மையிலேயே மகிழ்ச்சி யிருக்குமானுல், தயை செய்து தாங்கள் வில கிச் செல்லுங்கள்.

துரோ:— அபிமன்யு! பாண்டவர் குலத்தில் சுபத்திரையினுல் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு நீ. உத்தரையின் அன்பிலே— அர்ஜுனன் ஆண்மையிலே நீ பிரகாசித்து வருகிறுய். என் அம்பு கொண்டு இந்த விளக்கை அணைக்க நான் விரும்பவில்லை. குருக்ஷேத்திரக் குருதியிலே அர்ஜுன னின் பிரதி பிம்பம் மிதந்து செல்வதை இந்தக் கண்

கொண்டு பார்க்க வேண்டுமா? வேண்டாம் மகனே! என் வார்த்தையைக் கேள். சீக்கிரம் வெளியேறிவிடு.

அபி:— ஆசாரிய! உங்கள் கருணைக்கு இரங்குகிறேன். சத்துருக்களின் இரக்கத்திலே உயிர்வாழ்ந்திருக்க க்ஷத்திரியர்கள் ஒருபோதும் விரும்பமாட்டார்கள் என்ற உண்மையைத் தங்கள் மூப்பு மறைத்து விட்டதா? அல்லது இளைஞனை அச்சுறுத்தி வெளியேற்றிவிட்டு வெற்றிச்சங்கை ஊதிவிடலாம் என்று எண்ணி விட்டீர்களா?

துரோ:— அந்த வெற்றிச் சங்கு, உன் இறுதிச் சடங்கின் சங்காகவும் இருக்க வேண்டுமா என்றுதான் நான் கவலைப் படுகிறேன்.

அபி:— கவலையா? யாரைப்பற்றி? தயைசெய்து என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். என் மீது இரக்கமும் காட்ட வேண்டாம்.

துரோ:— அபிமன்யு! கௌரவர்களின் கோபாக்கினியானது துரோணரின் பிரதிக்ஞையினால் ஆகுதி செய்யப்பட்டு சக்ர வியூகமென்னும் இந்த ஓம குண்டத்திலே கொழுந்து விட்டெரிந்து கொண்டிருக்கிறது. அதில் உன்னை ஒரு சமித்தாகப் போட நான் விரும்பவில்லை.

அபி:— [உரக்கச் சிரித்து] அந்த ஓம குண்டத்தில் நீங்கள் விழுந்து விடாதபடி முதலில் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்; பிறகு என்னைச்சமித்தாகப் போடலாம். விசுவாமித்திருடைய யாகத்தை இராம லட்சுமணர்கள் என்னும் சிறுவர்கள்தான் காப்பாற்றினார்கள் என்பதை இச்சமயத்தில் நினைவூட்டுகிறேன்.

துரோ:— வீணாக என் வார்த்தைகளைக் கொட்டுகிறாய்?

அபி:— ஆம்; யுத்தகளத்தில் வீரர்கள் சந்தித்தால் பேச்சுக்கு இடமேது? அப்படியானால் ஆயுதமெடுங்கள். [பொறுத்து] என்ன யோசனை? கடைசி முறையாகக் கௌரவர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு வரவில்லையா? அல்லது தங்களுடைய தேகத்திலிருந்து வழிந்தோடும் இரத்தப் பெருக்கிலேயே தங்களுக்குத் திலதர்ப்பணம்

செய்ய வேண்டுமென்று மகாத்மா அசுவத்தாமாவுக்குக் கட்டளையிட வேண்டுமா?

துரோ:— அபிமன்யு! மீண்டுங் கூறுகிறேன். திரும்பிச் சென்றுவிடு. உன் உயிரைப் போக்கி அதனுல் அர்ஜுனன் வாழ்வைக் குலைக்க நான் விரும்பவில்லை.

அபி:— ஆசாரியார் சத்துருவினிடத்தில் ஏன் இவ்வளவு கருணை காட்டுகிருர் என்பது எனக்கு விளங்கவேயில்லை.

துரோ:— அபிமன்யு! யுத்த களத்திலேதான் நான் பாண்டவர்களுக்குச் சத்துரு; மற்றச் சமயங்களில் நான் அவர்களுடைய மித்திரன்.

அபி:— அதனுல்தான் எனது பிதா இல்லாத சமயம் பார்த்து இந்தச் சக்ர வியூகத்தை வகுத்தீர்களோ? பாண்டவர் சேனையை நிர்மூலமாக்க இந்தப் போர்க்கோலத்துடன் வந்திருக்கிறீர்களோ?

துரோ:— கேவலம் கடமையைக் கருதி—சொன்ன சொல்லுக்குக் கட்டுப்பட்டு—இந்தக் காரியத்தில் இறங்கியிருக்கிறேன்.

அபி:— அப்படியானல் நான் என் கடமையைச் செய்யவேண்டாமா? யுத்தகளத்திற்கு வெளியே உங்களை என் பிதாவின் குருவாகப் போற்றுவேன். ஆனல் போர்க்களத்தில் உங்களை ஒரு வைரியாகவே கருதுவேன்.

துரோ:— குமாரா! கடைசியில் உன் சிரத்தை இந்த வில்லாயுதத்திற்குப் பலியாகக் கொடுக்கத் தீர்மானித்து விட்டாயா?

அபி:— குருவைக் கொன்ற ஒரு பெரும் பாவத்தை என் ஆயுதத்திற்கு ஏற்றிவைக்க நீங்கள் தீர்மானித்திருக்கும் பொழுது நான் என்ன செய்யட்டும்? குருஹத்தி மட்டுமல்ல, ப்ரஹ்மஹத்தி, விருத்தஹத்தி முதலிய எல்லாக் களங்கங்களும் என் ஆயுதத்திற்கு வந்து சேருகின்றன. ஆசாரிய! வேண்டாம், வேண்டாம், வேண்டாமென்று மும்முறை கூறுகிறேன். விரைவிலே திரும்பி செல்லுங்கள். கௌரவ சேனுதிபதி புறமுதுகு காட்டிவிட்டார்

என்ற பழிச் சொல் வாராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்.

துரோ:— [இழி நகையுடன்] எறும்பின் வார்த்தையைக் கேட்டு யானை திரும்பிப் போக வேண்டுமென்று கூறுவது போலிருக்கிறது!

அபி:— ஆனால் அந்த எறும்பு யானையின் செவிக்குள் சென்று படுத்தும் பாட்டை ஆசாரியாருக்கு நான் எடுத்துக் கூற வேண்டுமா?

துரோ:— ஆனால் எடு ஆயுதத்தை!

அபி:— ஏறுங்கள் இரதத்தின் மீது!

[இருவரும் தத்தம் இரதத்தின் மீது ஆரோகணித்துக் கொள்கிறார்கள். யுத்த வாத்தியங்கள் முழங்குகின்றன]

அபி:— ஆசாரியார் முடியுமானால் சமாளித்துக் கொள்ளட்டும். [நாணேற்றி அம்பெய்கிறான்]

துரோ:— [வில்லெடுத்து] என்ன இது? ஏன் இப்படி கையினின்று வில் நழுவுகிறது? வஞ்சகர் நெஞ்சம் போல் மனம் குழம்புகிறது! [மௌனமாய் இருக்கிறார்]

அபி:— ஆசாரியார் ஏன் இப்படி கற்சிலைபோல் காணப்படுகிறார்?

துரோ:— அபிமன்யு!

அபி:— தோல்வியை ஒப்புக்கொண்டதாக ஆசாரியார் எனக்கு அறிவிக்கிறாரா?

துரோ:— அர்ஜுனனுக்கு ஆயுதப் பயிற்சி அளித்துவிட்டு, அவன் மகனுடன் போர்புரிந்து வெற்றிக்கொடி நாட்ட நான் ஒருபோதும் விரும்பவில்லை.

[ஒருபுறமாக இரதத்துடன் செல்கிறார். அபிமன்யுவின் பக்கத்தில் வாத்தியங்கள் சப்திக்கின்றன]

[காட்சி முடிகிறது]

## மூன்றுவது களம்.

இடம்:— யுத்தகளத்தின் மற்றொரு பாகம்.

காலம்:— காலை.

[துச்சாதனன் கீழேவிழுந்து கிடக்கிறான். அவன் மீது அபிமன்யு ஆக்ரோஷத்துடன் உட்கார்ந்திருக்கிறான்]

அபிமன்யு:—என்ன சொன்னுய்? பால்குடிக்கும் குழந்தை! ஹூம்! அந்தக்குழந்தை இப்பொழுது உன்உதிரத்தைக் குடிக்கக் காத்துக் கொண்டிருக்கிறது. கண்விழித்துப் பார்.

துச்சாதனன்:—[புரண்டு] என்னை விட்டுவிடு.

அபி:— விட்டுவிடுவதா? உன்னையா? இந்த நர பிசாசத்தையா? [பொறுத்து] என்ன, விழித்துப்பார்க்கிருய்? உன்சிவந்த கண்களால் என்னைச் சிதற அடித்துவிடலாமென்று பார்க்கிருயா? இந்தக்கண்களைப்பிடுங்கிக் கழுகுகளுக்கு இரையாக்கப் போகிறேன்! மாதா துரோபதையை தாசி திருஷ்டியுடன் நோக்கின கண்களல்லவா? [பொறுத்து] மகா பதிவிரதையான அந்தப் புண்ணியவதியை நடுச் சபையிலே இழுத்து வந்து அவமானப்படுத்திய இராட்சதப் பிண்டமல்லவா இது? "அருமியிருதடங்கண் அஞ்சன வெம்புனல் சோர அளகஞ்சோர வேருன துகில் தகைந்த கைசோர மெய்சோர வேரோர் சொல்லுங் கூருமல் கோவிந்தா கோவிந்தா" வென்று என் தாய் அரற்றி நின்ற காலத்து, அவளைப் பார்த்துச் சிரித்த வாயல்லவா இது? [பொறுத்து] இந்தக்கரங்களைத் துண்டு துண்டாக நறுக்கி உலர்த்தி உலக்கையால் பொடிசெய்து இச்செம்மண்ணிலே சேர்த்து அஸ்தினபுரி முழுவதும் கோலமிடவேண்டும். தேவேந்திரனின் மருகி, சவ்விய சாசியின்மனைவி, 'கருமேக நெடுங்கடல் கார் அனையான்' கழலிணையில் குழல்வைத்து வணங்கும் என் தாய், மனங் குலைய, மானங்குலைய அவளைக் காகா வென்று பிடித்திழுத்து வந்த கரங்களல்லவா இவை? தேவர்களுந் தீண்டு

தற்கரிய என் அன்னையின் திருமேனியைத் தீண்டி அவள் அடிவயிற்றில் என்று நெருப்பு வைத்தனையோ அன்றே குருகுலத்திற்கும் தீ மூட்டி விட்டாய். வேகின்ற அந்த வெந்தணலிலே நீ ஒரு பொறி. பொறியிலே அகப்பட்ட எலிபோல் என்னிடம் அகப்பட்டுக் கொண்டுவிட்டாய். பாரதப் போரெனும் இந்தச் சூரு வளியிலே உன்னைப்பறக்கவிடுகிறேன் பார். [பொறுத்து] சை! பொல்லா வசையே பூண்ட இந்தப் புல்லனைக் கொன்று நான் ஏன் வசைதேடிக் கொள்ள வேண்டும்? பீமனுடைய வேட்டையன்றோ இது? [எழுந்து] ஓடிப் போ! புனிதமான யுத்த க்ஷேத்திரத்தில், பிறன் மனையாளைத் தீண்டிய பேடிக்கு இடமில்லை; திரும்பிப் பாராமல் ஓடிப்போ.

[காட்சி முடிகிறது]

---

## நான்காவது களம்.

இடம்:— குருக்ஷேத்திரத்தில் பிறிதொரு புறம்.

காலம்:— காலை.

[துச்சாதனன், துரோணர், கர்னன், சல்யன், சகுனி முதலியோர் பேசிக்கொண்டிருக்கின்றனர்]

துரியோதனன்:—[வேகமாகப் பிரவேசித்து] ஆசாரிய! ஆசாரிய! என்ன அநியாயம் இது? யானைக் கூட்டத்திலே சிங்கக் குட்டி யொன்று வந்து இப்படிக் கலக்குகிறதே!

துரோ:— துரியோதனா! கவலைப் படாதே.

சகுனி:— கவலைப்படாதே; ஆசாரியார் இருக்கிறார் ஆறுதல் கூற கடைசிகாலம் வரை.

துரோணர்:— [கோபத்துடன்] சகுனி———

துரி:— குருதேவ! குரு வமிசம் கருவழிக்கப்பட்டு வருவதைக் கண்டு நான் அழுவேனோ? கர்னன் துணையிருக்க, சல்யன் சாகசம் இருக்க, சகுனியின் ஆலோசனையிருக்க, என் படையழிபடுவதைக் கண்டு நான் அழுவேனோ?

கர்ணன்:—அரசே! அமர்க்களத்திலே அதைரியப்படுவது அழு கல்ல. வீரர்கள் வினை நிலமல்லவா இது?

சல்யன்:—பழிக்குப் பழி வாங்கவேண்டுமேதவிர சோர்வுடன் பின்னடையக் கூடாது.

துச்சாதனன்:—அஃது ஒருபோதும் நடவாது. என்னை எப்படி அவமானப் படுத்தினன் அச் சிறுவன்?

துரி:— அந்தச் சிறுவன் ஒருவன், நம்மனைவரையும் சிந்தனை யில் ஆழ்த்தி வைத்திருக்கிறான். அவனை மடக்கி வீழ்த் துவது எப்படி?

துர்:— அப்படி வீழ்த்தாவிட்டால், குரு வம்சம் குரு க்ஷேத் திரத்தில் ஐக்கியப்பட்டுவிட வேண்டியதுதான்.

சகு:— எனக்கு ஒன்று தோன்றுகிறது. அபிமன்யு சக்ரவியூகத் தை உடைத்தெறிந்து அதனினின்றும் மீண்டுவரும் போது நாமனைவரும் அவனைச் சூழ்ந்துகொண்டு அடித் துக் கொன்றுவிடுவோம்.

துர்:— மிகச் சரியான யோசனை! எப்படியும் வாள் தவிர மற் றெல்லா யுத்தக்கருவிகளையும் அவன் இழந்துவிட்டான். அவ்வாளை மட்டும் தந்திரமாக வசப்படுத்திக் கொண்டு விட்டோமானால் பல்லைப் பிடுங்கின பாம்புபோல் அடங்கி விடுவான். அப்பொழுது அவனைக் கொல்வது எளிது.

துரோ:— அதருமம்! அநியாயம்!!

துரி:— ஆசாரிய! சத்துருக்களைச் சம்ஹாரம் செய்யவேண்டு மென்ற இலட்சியத்தைப் பிரதானமாகக் கொண்டவர் கள், எத்தவிதமான தந்திரங்களை வேண்டுமானாலும் கை யாளலாமல்லவா? சமாதான காலத்தில் அதருமமா யிருப்பது சண்டைக் காலத்தில் தருமமாகிவிடுகிறதல் லவா?

துரோ:— பதினாறு வயது பாலகனைக் கொல்ல இத்தனை பேர் சேர்ந்து சதி செய்வதா? கோழைத்தனம்! அவமானம்!!

சகு:— சேனாபதிக்குத் தருமோபதேசம் செய்ய அதிகாரமில்லை!

துரோ:— [தமக்குள்] சை! புழுக்களின் சகவாசம் நம்மையும் குப்பை மேட்டில் இழுத்துச் செல்கிறது. கோழைகளின் நட்பு, மனிதனை மிருகமாக்குகிறது. [பிரகாசமாய்] சுயோதனா! நீ எதைச் செய்தாலும் செய். ஆனால் உன் பெயருக்கு, குரு வமிசத்தின் நற்புகழுக்கு, ஆரியா வர்த்தத்தின் பெருமைக்குக் களங்கம் விளைவியாதே. அபிமன்யுவோடு நேராகப் போராடி வெற்றி காண முடியவில்லையென்றால் அவனைக் கோழைத்தனமாகக் கொலை செய்ய முடலாதே. மார்பிலே அடிப்பதற்கும் அடிபடுவதற்கும் தான் பாரத தேச வீரர்களுக்குத் தெரியும். உன்னுடைய இந்த இழி செயலினால், உலகத்தாரெல்லாரும் நம் நாட்டைப் பார்த்துப் பரிகசிக்க இடங்கொடுத்து விடாதே.

சகு:— ஆசாரியாருடைய தருமோபதேசம் இராஜ சபையிலே அமைதியாகக் கேட்கப்பெறும். [எதிர்ப்புறத்தில் யுத்த கோஷம் கேட்கிறது]

துரி:— அதோ, வெற்றி முழக்கத்துடன் வீறிட்டு வருகிறான் அபிமன்யு!

[ஆரவாரத்துடன் அபிமன்யு பிரவேசிக்கிறான்]

அபி:— விடுதலை! விடுதலை! விடுதலை!

துச்:— நில்; இனிமேல் இல்லை.

அபி:— யார் அது? அட! துச்சாதனனா? எந்த முகத்துடன் என்னெதிரில் வந்து நிற்கிறாய்? உனக்கு வெட்கமில்லை? மானமில்லை? மானிட உருவத்திற்குள்ள உணர்ச்சிகூட உனக்கு இல்லையா?

சகு:— வலையிலே அகப்பட்ட பறவை கீச்சு கீச்சென்று கத்துகிறது.

அபி:— இவர்தான் சகுனி மாமாவோ? வாழையடி வாழையென வந்த குரு வமிசத்தை வீரமற்ற கோழையாக்கி, பாரத தேசத்துப் பெண் மக்களின் சாபமென்னும் பாழ்வெளியிலே பறக்கவிட்ட பெருமை இவருடையது தானோ? [தலையசைத்து] உம்——இந்தக் கண்ணைப்பார். முதுகாட்டை உகக்கும் காகங்கூட இதனைத் தொடாது.

துச்:— உன் வாய் வீச்செல்லாம் இங்கே ஓங்காது.

அபி:— ஆம்; இந்தப் பேடிகள் கூட்டத்தில், இந்தப் பேய்கள் மத்தியில் மனிதனுக்கு வேலையில்லையென்று நீங்கள் கருதினால் உடனே எனக்கு வழி விட்டுவிடுங்கள். இல்லையேல், இச்செம்மண்ணை வாயிலே கவ்விக் கொள்ள வரும். பாண்டவர்களால் பன்முறை தோற்கடிக்கப்பட்டும், அவர்களால் உயிர்ப் பிச்சையளிக்கப்பட்டும் இன்னும் எந்த வாயால் என்னோடு பேச வருகிறீர்கள்?

துரி:— அபிமன்யு! அர்ஜுனன் புத்திரனாகப் பிறந்தும், கிருஷ்ணனுடைய உபதேசங்களைப் பெற்றும் ஏன் இப்படி பெரியோர்களை நிந்திக்கிறாய்?

அபி:— பெரியோர்கள், பெரியோர்களாக நடந்து கொண்டால் அவர்களை வணங்க அபிமன்யு எப்பொழுதும் சித்தமாயிருக்கிறான்.

துரி:— உன்னுடைய வீரத்தை நாங்கள் எப்பொழுதும் குறைவுபடுத்தியதில்லையே.

அபி:— மூத்தவர்களிடத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைமையிலும் நான் பிசகியது கிடையாது.

துரி:— இந்த வார்த்தை உண்மைதானா?

அபி:— எல்லாம் வல்ல பரம்பொருளைப்போல் சத்தியமானது.

துரி:— அப்படியானால் அந்த வாளை அப்படி எறிந்துவிட்டு என்னருகில்வா. உன் மூலமாகப் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இன்று யுத்த களத்திலேயே நட்பு ஏற்பட்டுவிட்டது.

அபி:— அஃதென் பாக்கியம். [வாளை உயரத்தூக்கி] வீரர் குழுவிலே என்னை வளர்த்துவந்த வாளாயுதமே! சிறிது விச்ராந்தி செய்து கொள். [வாளை ஒருபுறமாக எறிகிறான்]

துரோ:— [தமக்குள்] அநியாயம்! என்ன மோசம்! நீசர்களுடைய உறவு இந்தக் காட்சியைத் தான் அளிக்கும்.

அபி:— [துரியோதனன் அருகிற் சென்று கைகூப்பி] தந்தையே! மைந்தன் வணங்கி நிற்கிறேன்.

[இச்சமயம் திடீரென்று ஆரவாரத்துடன் எல்லாரும் சேர்ந்து அபிமன்யுவைச் சூழ்ந்து பிடித்துக் கொள்கிறார்கள்]

துரி:— கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். விட்டு விடாதீர்கள்.

துரோ:— [தமக்குள்] ஆகாசமே! இன்னும் ஏன் கீழே விழாமல் இருக்கிறாய்? பூமாதேவியே! இன்னும் ஏன் நடுக்கங் கொள்ளாமலிருக்கிறாய்?

அபி:— [ஆச்சரியத்துடன்] என்ன இது? விடுங்கள் என்னை!

சகு:— யமலோகம் சென்ற பிறகு.

அபி:— அட பேடிகளே! உங்களுக்கு லஜ்ஜை கூட இல்லையா? தலைவணங்கி நின்றவன் தலையிலே இப்படி அடிப்பதா? நீங்கள் க்ஷத்திரியர்களா? இதைவிட அதோ மலைமலையாகக் குவிந்து கிடக்கும் பிணங்களைத் தின்னலாமே! என்னை வெல்ல உங்களால் முடியவில்லை யென்றால், என்னிடம் வந்து அடைக்கலம் புகுந்திருந்தால் உலகத்திலுள்ள எல்லாச் சத்துருக்களிடமிருந்தும் உங்களைக் காப்பாற்றி யிருப்பேனே!

சகு:— அதிகமாகக் கூத்தாடாதே.

அபி:— என்னை விட்டு விடுங்கள்; உங்கள் தலைகள் உருளும்படி கூத்தாடுகிறேன். உங்கள் இருப்பிடத்தை ஸ்மசானமாக்கி அதில் சிவபிரானைப் போல் தாண்டவம் செய்கிறேன். விடுங்கள் என்னை. [விடுவித்துக் கொள்ள முயற்சிக்கிறான்] அட பாபிகளே! பச்சிலைச் சாறென உங்களைப் பிழிந்து விடுவேனென்று பயப்படுகிறீர்களா? [துரோணரைப் பார்த்து] ஆசாரிய! உங்கள் எதிரிலே இந்த அநியாயமா? நீங்கள் இதை அங்கீகரிக்கிறீர்களா? [பொறுத்து] என் முகத்தைத் தாழ்த்திக்

கொள்கிறீர்கள்? நீங்கள் வீரரல்லவா? சத்திய சீலரல்லவா? தர்மக்ஞரல்லவா? உங்கள் சந்நிதியிலேயே இந்தத் துராசாரமா? யுத்த தர்மத்தை எல்லாருக்கும் உபதேசித்தருளும் நீங்களே இந்த அநியாயத்திற்கு இடங் கொடுத்தால், உலகத்திலே வீரம் என்பது எங்கே? தருமம் என்பது எங்கே? குருதேவ! வாய் விட்டுச் சொல்லுங்கள் இந்தச்செயல் நியாயமென்று!

துரோ:— மகனே! அநியாயம் என்பதை நான் அறியாமலில்லை; அதருமம் என்பதை நான் உணராமலில்லை. ஆனால் என்னுடைய பிரதிக்ஞையே என்னை எச்செயலும் செய்ய வொட்டாமல் சிறைப்படுத்தி யிருக்கிறது. பாரதந்திரத்தினால் நான் சுதந்திர மிழந்து நிற்கிறேன்.

அபி:— ஆசாரிய! ஆசாரிய! நியாயமின்னதென்று சொல்லக் கூட உங்களுக்குச் சுதந்திரமில்லையா? அடே! தருமதேவதை, இந்தக் கோழைகளைக் கண்டு பாரத வர்ஷத்திலிருந்து ஓடிப்போய் விட்டாளா?

துரி:— அபிமன்யு! அதிகமாக ஆடாதே. எங்களுடைய கையிலே இப்பொழுது நீ இருக்கிறாய். நீ மரணமடைவதும், உயிரோடிருப்பதும் எங்கள் வசத்தில் இருக்கிறது.

அபி:— அப்படியானால் எதைச் செய்யவேண்டுமோ அதைச் செய்யுங்கள்.

துரி:— விரும்பினால் பிராணபிக்ஷை அளிக்கிறோம்; கேள்.

அபி:— பிராண பிக்ஷை! அதுவும் உன்னைப்போன்ற வஞ்சகத் தூர்த்தர்களிடமிருந்தா? பிக்ஷை வேண்டுவது பிச்சாண்டிகளின் செயல்; க்ஷத்திரியர்களின் செயலன்று. அர்ஜுன குமாரன் இத்தகைய அற்பத்தனமான பிக்ஷையை எப்பொழுதுமே வேண்ட மாட்டான்.

துரி:— வேறு எது வேண்டுமானாலும் கேள்.

அபி:— உண்மையாகவா?

துரி:— உண்மையாக.

அபி:— அப்படியானால் அதோ விழுந்து கிடக்கும் என் வாளை என்னிடம் கொடுத்து விடுங்கள். பிறகு யார், யாரிடம் பிட்சை வேண்டுகிறார் என்பதைப் பாருங்கள். மாதா சுபத்திரை என்னைப் பெற்றெடுத்தது உண்மையானால், அந்த வாளாயுதம் ஒன்றைக் கொண்டு, உங்களெல்லா ரையும், அதோ—அந்தக் குவியலோடு குவித்துவிட்டு சக்ர வியூகத்தைச் சிதற அடித்துக்கொண்டு எங்கள் பாசறைக்குச் செல்கிறேன்.

சகு:— பாசறையின் ஆசையை ஒழித்து விடு.

துச்:— அந்த வாள் உன் கரத்தில் இனிச் சோபிக்காது.

அபி:— கௌரவர் கோமானே! ஏன் மௌனம் சாதிக்கி றீர்கள்?

துரி:— வீழ்த்திய வாளைத் திருப்பிக் கொடுக்க முடியாது.

அபி:— எப்படிக் கொடுப்பீர்கள்? [பொறுத்து கர்னனைப் பார்த்து] கொடையாளி என்று நானிலம் போற்றும் கர்னனே! கொடுப்பதாகக்கூறி பிறகு அதை மறுத்து விட்டதை இதுகாறும் பார்த்திருக்கிறீர்களா? ஏன் மௌனஞ் சாதிக்கிறீர்கள்? [பொறுத்து] சாரமற்ற எலும்புத் துண் டைக்கண்டு குரைக்கும் நாய்களே! நாய்க்குள்ள நன்றி கூட உங்களுக்கில்லை.

துச்:— அதிகமாகப் பேசாதே. [எல்லாரும் சேர்ந்து அபிமன்யுவை அடிக்கிறார்கள்]

அபி:— ஹா! மாமா! எல்லாம் உன்னடிமையே. எல்லாம் உன்னுடைமையே. நீயே சாட்சி! கோழைகளால் கொல் லப்பட்டதாகக் குறை கூறி நின் குரை கழலில் என்னைச் சேர்த்துக்கொள்ள மாட்டாயா? ஐயோ! நான் மரணத் திற்காக அஞ்சவில்லை. அஃது ஆரிய ஜாதியின் தருமமன்று. இந்தக் கோழைகளின் கையிலே, இந்த அற் பப் பூச்சிகளின் வசத்திலே சிக்கிக்கொண்டதால் எனக் குச் சொர்க்க வாசலையும் அடைத்து விடுவாயோ என்று தான் அஞ்சுகிறேன். அண்டர் நாயக! ஆரியருக்கு வாழ்வளித்த பெரும! வேழமுதலே யென அழைப்ப

என்னென்று ஓடிவந்த அண்ணால்! தர்மக்ஷேத்திரத்தில் தர்ம யுத்தம் புரிந்தேன்; தர்மத்திற்காக என்னைப் பலி கொடுக்கிறேன். ஆனால் அதருமிகளிடத்தில் சிக்கிக் கொண்டேன். ஆரியா வர்த்தத்தின் கௌரவத்திற்காக ஆரிய மாதாவின் அடியிலே என் உயிரை அர்ப்பணம் செய்கிறேன். எந்தாய்! நின்னருளிலே வளர்ந்து வாழ்ந்த நான் நின்னுருவைக் காணாது போகிறேன். ஆனால் நின்னிடம் வேண்டுவதொன்றுண்டு. என்னை வீரனாக வளர்த்த என் தாய்க்கு—உன் சகோதரிக்கு—ஆறுதல் கூறு. [பொறுத்து] அம்மா! சுபத்திரே! உன் வாழ்க்கையின் விளக்கு அணைந்து விட்டது. உன் பெருமைக்குரிய பிரதி பிம்பம் மறைந்து விட்டது. எனக்கு வீரதிலகமிட்டு வழியனுப்பினாய். வீரனாகத் திரும்பி வந்து உன் பொன்னடி பணியாத பாபியாகி விட்டேன். ஆனால் நான் கோழையாக இறக்கவில்லை. வீரனாகவே மடிகிறேன். என் பிதாவுக்கு இதை எடுத்துச் சொல். [பொறுத்து] அப்பா! உங்கள் வில்லாண்மையெல்லாம் இந்தப் புல்லனுக்குப் பயன்படவில்லை. உங்களுடையபுத்திரன், உங்களுடைய தேஜஸ், உங்களுடைய வாழ்க்கையின் எதிரொலி—இதோ—மண்ணிலே மறைந்து போகிறான். மகாத்மா யுதிஷ்டிரருக்கும், பீமனாதியோர்க்கும் என் வணக்கத்தைத் தெரிவியுங்கள். [பொறுத்து] உத்தரே! பிரியதமே! நீ எங்கே இருக்கிறாய்? பாசறையில் உன்னைப் பரதவிக்கவிட்டு வந்தேன். கண்ணீரும் கம்பலையுமாக நின்றாய். இனி என் செய்வாய்? உன் காதற் களஞ்சியம், பிரேம பாத்திரம், இப்பொழுது மாசு படிந்து கிடக்கிறது. உன் வாழ்க்கையின் உதய சந்திரனை ராகு கேதுக்கள் சூழ்ந்து கொண்டு விட்டன. [பொறுத்து] அட பதர்களே! அநியாயமாக என்னை வஞ்சித்து—ஹா! மோசம்!—இதோ சன்மானம்! [காலால் அனைவரையும் உதைக்கிறான்]

துச்சாதனன் முதலியோர்:—பேசாதே; பேசாதே. [அனைவரும் சேர்ந்து அபிமன்யுவைத் தாக்குகிறார்கள்]

அபி:— ஹா! மாமா! வாசுதேவா!

துச்:— வாயைமூடு; அந்த இடையனுடைய பெயரைச் சொல்லாதே. [மீண்டும் அடிக்கிறார்கள்]

அபி:— கிருஷ்ணா! கிருஷ்ணா!!

[கீழே விழுந்து விடுகிறான்]

துச்சாதனன் முதலியோர்:—ஜெய! துரியோதன மகாராஜருக்கு ஜெய!!

[காட்சி முடிகிறது.]



# மூன்றும் அங்கம்

## முதற் களம்.

இடம்:— உத்தரையின் படுக்கையறை,

காலம்:— பகல்

[உத்தரை படுக்கையில் படுத்திருக்கிறாள். உத்தரையின் தோழி பிரவேசிக்கிறாள்]

தோழி:— என்ன இது? ஒருநாளுமில்லாமல் இன்று பகல்வேளையில் இளைய ராணி தூங்குகின்றாள்! [அருகில் சென்று] உடம்பெல்லாம் முத்துமுத்தாக வியர்வை! முகம் சிவந்து விட்டது! அவளைப்போய் அழைத்துக் கொண்டுவருகிறேன். [செல்கிறாள்]

உத்தரை:—[கனவுகண்ட வண்ணம்] நாதா! நாதா! எங்கே போகிறீர்கள்? ஆயுதமெல்லாம் எங்கே? விமானத்தின் மீது ஏறிக்கொண்டு விட்டீர்களா? - என்ன? என்னை அழைத்துப்போக முடியாதா? நிச்சயமாகவா—? இப்படித் திரும்புங்கள்—! என்னைப் பார்த்துச் சொல்லுங்கள்! அதோ! தேவேந்திரன் !—புஷ்பவர்ஷம் !—ஐயோ! தேகத்தில் எத்தனை காயங்கள் !—இரத்தம் ஓடுகிறதே! ஐயா! ஏன் அடிக்கிறீர்கள்! நாதா! நாதா! [பொறுத்து விழித்துக் கொள்கிறாள்] என்ன இது? பகலிலே கனவு! ஐயோ!ஒருவருமில்லையா இங்கே?

தோழி:— [உள்ளிருந்த வண்ணம்] இதோ வந்துவிட்டேனம்மா!

[காட்சிமுடிகிறது]

## இரண்டாவது களம்

இடம்:— குருக்ஷேத்திரத்தில் ஒருபாகம்.

காலம்:— பகல்

[யுதிஷ்டிரர், பீமன், சகதேவன் முதலியோர் இரதத்துடன் பிரவேசிக்கின்றனர்]

பீமன்:— முன்னே முடுகிச் செல்லுங்கள்.

யுதிஷ்டிரர்:—தம்பீ ! இரு. அதோ, ஏன் சேனைகள் கலங்கி யோடுகின்றன?

சகதேவன்:—இதுகாறும் கேளாத பேரொலி இன்று கேட்கிறது.

பீம:— ஆம்; நகுலன் எங்கே?

சக:— அதோ! ஏதோ துர்ச்சம்பவம் நடந்திருக்கிறது!

[நகுலன் பிரவேசிக்கிருன்]

நகுலன்:—அண்ணு! அண்ணு !

யுதி:— தம்பீ! என்ன செய்தி? யாருக்கு ஆபத்து?

நகு:— நம் மீது பேரிடி விழுந்துவிட்டது; நாம் பாவிகளாகி விட்டோம்.

பீம:— நகுல! என்ன விஷயம்? குழந்தை அபிமன்யு எங்கே?

நகு:— [அழுதவண்ணம்] சொர்க்க லோகத்திலே—

யுதி:— என்ன? என்ன? அபிமன்யு இறந்துவிட்டானு?

நகு:— ஆம்; கௌரவர்கள் கொன்றுவிட்டார்கள்.

யுதி:— ஹா! [அப்படியே மூர்ச்சித்து விழுகிருர்]

பீம:— [பொறுத்துக் கோபத்துடன்] கௌரவர்கள் கொன்று விட்டார்கள்!—உம். இந்த தர்மமூர்த்திக்காக அடங்கிக் கிடந்த என்கோபத்தைக் கிளப்பிவிட்டார்கள். கௌரவ சேனையாவும், குருக்ஷேத்திர இரத்த வெள்ளத்திலே முழுகாதவரை இந்தக் கோபம் தணியாது. [பொறுத்து ஆக்ரோஷத்துடன்] அபிமன்யு! அபிமன்யு! இந்த இரத்த வெள்ளத்திலே உன்னை நீராட்டி வைக்கிறேன். [பொறுத்து] அண்ணு! அண்ணு!

யுதி:— [மூர்ச்சை தெளிந்தெழுந்து துக்கத்துடன்] தம்பி! மின்னுமல் இடி இடித்து விட்டது. அர்ஜுனனுக்கு நான் என்ன கூறுவேன்? 'என் மகனெங்கே' என்று கேட்டால் என் முகத்தை எங்கே வைத்துக் கொள்வேன் ? சக்ரவியூகமென்னும் வடவைத் தீயிலே தள்ளிவிட்டேன் என்று கூறுவேனு? [பொறுத்து] பதியிழந்

தோம்! படைத்த நிதியிழந்தோம்! வனத்திலே வசித்தோம்! ஒளிந்து உயிர் வாழ்ந்தோம்! படாத பாடெல்லாம் பட்டோம்! கடைசியில், மகனே! உன்னையும் பறிகொடுத்து விட்டோம். இனி உலகத்திலே எங்களுக்குச் சுகம் என்பதேது! மகிழ்ச்சி யென்பதேது? [பொறுத்து] எந்த இராஜ்யத்துக்காக இந்தப் போர் நடைபெறுகிறதோ, அந்த இராஜ்யத்தை இனி யார் அநுபவிக்கப் போகிறார்? நாங்கள் அடைந்த அவமானத்தை யெல்லாம், சகித்த துன்பத்தை யெல்லாம், உனக்கு மணிமகுடஞ் சூட்டி மறந்து விடலாம் என்று எண்ணியிருந்தோம். ஆனால், எல்லாம் கானல்நீரிலே தாகசாந்தி செய்து கொண்டது போலாயிற்று. [பொறுத்து] அபிமன்யு! உன்னை அடிக்கடி அழைத்து மகிழ வேண்டுமென்ற ஆதுரத்தால் 'அபிமா' 'அபிமா' என்று அழைத்த வாயிலே மண்ணைப்போட்டுப் போய் விட்டாய்! குழந்தாய்! நீ எங்கே சென்றிருக்கிறாய்? வில்லாளி விஜயனிருக்க, மல்லாளும் வீமனிருக்க, மாநகுல சகதேவர்தாமிருக்க, பாவியான நானிருக்க, எல்லோருக்கும் மேலாய் மரகதமாமலை போல் மாமா கிருஷ்ண மூர்த்தி இருக்க, வினையறியா இளஞ் சிங்கம் நீ இறப்பதா? பாரத தேசத்தில் இத்தகைய அநியாயம் எப்பொழுதேனும் நடந்திருக்கிறதா? [பொறுத்து] அப்பா! உன்னை மனமுவந்து இந்தக் கோர யுத்தத்திற்கு அனுப்பிய பாவியல்லவா நான்? அதன் பலனை மறுகணத்திலேயே அநுபவிக்கிறேன். மகனே! நெடுந்தேரூர்ந்து சென்றனை! இமைப் பொழுதிற் திகிரியு முடைத்தனை! தெவ்வரோட வென்றனை! சுயோதனன் மகவுடனே மகவனைத்தும் கொன்றனை! ஆனால் மீண்டுவந்து நின் னாண்மை கூறக்கூசினையோ? [விசனிக்கிறார்]

பீம:— அண்ணா! துக்கப்படாதீர்கள்! இந்தப் புத்திர சோகம் என்னும் நெருப்பைக் கண்ணீரினால் அணைக்க முடியாது; கௌரவர்கள் இரத்தத்தினாலேயே அணைக்க முடியும்.

சக:— ஆம் அண்ணு! சென்றினிப்பகை முடித்து விஜயனுக்கு ஆறுதல் கூறுவோம்.

நகு:— அதோ வியாச மகரிஷி வருகிருர்.

[வியாசர் பிரவேசிக்கிருர்]

வியாசர்:—தர்மபுத்திரா!

யுதி:— மகரிஷி! என்னைத் தருமபுத்திரன் என்று அழைக்க வேண்டாம். நான் பாபி—நாரதமன்—நரபிசாசம்; தாயிருக்கக் கன்றைக்கொன்ற கொடும்பாதகன். பாண்டவர் குலத்திற்குப் பெரும் பழி தேடி வைத்துவிட்டேன். ஐயா! எங்கள் குலக்கொழுந்து கருகிவிட்டது. அர்ஜுன குமாரன் இறந்து விட்டான். ஆரிய மாதாவின் வாழ்வு சீர்குலைந்து விட்டது. இனி நாங்கள் ஏன் இருக்க வேண்டும்? தவச்சிரேஷ்ட! இதற்கு மூலகாரணம் யார் தெரியுமா? இந்தப் பேய்தான்; இந்தக் கற்பாறைதான். [வியாசரின் அடியில் விழுகிருர்]

வியா:— பாண்டு புத்திரா! அதைரியப்படாதே. இப்படி நீ துக்கப்படுவது அழகல்ல. விதி நியமத்தை யார் மாற்றமுடியும்? எல்லாம் அந்தப் பரந்தாமனின் திருவிளையாடலல்லவா?

யுதி:— அதைரியப் படாதே என்று சொல்வது எளிது. ஆனல் என் இருதயத்திலே எரி மலை அக்கினிஜ்வாலைடைக் கக்க ஆரம்பித்து விட்டது. அதிலும், உத்தரை நாதனற்ற ஹீனையானதற்குக் காரணம் நானென்று நினைக்கையில் என் தேகமெல்லாம் கூசிக் குலைகிறது. பிரபு! அவளை விதவா வேஷத்துடன் நான் எப்படிப் பார்ப்பேன்? முனிவா! அபிமன்யுவைப் போன்ற புத்திரன், உலகத்திலே இனியாருக்குக்கிடைக்கப் போகிருன்? அத்தகைய கர்மவீரர்கள் இனி இந்தப் பாரத நாட்டிலே தோன்றப் போகிருர்களா?

வியா:— பீமா! தமையனைப் பாசறைக்கு அழைத்துச் செல்.

பீம:— அண்ணு! வாருங்கள் பாசறைக்கு.

வியா:— எழுந்திரு யுதிஷ்டிரா! க்ஷத்திரிய குமாரனுக்கு இத்தகைய கலக்கமும் உண்டாகலாமா?

யுதி:— [சென்று கொண்டே] அபிமன்யு! அபிமன்யு!

[அனைவரும் செல்கிறார்கள்]

---

## மூன்றாவது களம்.

இடம்:— தட்சணபதம்.

காலம்:— பிற்பகல்.

[சோமயாஜுலு முன்னும் அவர் மனைவி பின்னுமாக தட்சணதேசம் நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள்]

சோம:— வாயேண்டி பர பரன்னு. இப்போதான் என்னமோ அன்ன நடை நடக்கிறே.

சோ. ம:—போரும் உங்க நாட்டியம்; நடுவழியிலே ஆடாதெங்கோ.

சோம:— இந்த மாதிரி நடந்துபோனா, நம்ம பேரன் தலைமுறையிலே தான் தட்சணம் போய்ச்சேரலாம்.

சோ. ம:—போரும்; பேரன் பேத்தி இருக்கவாள்ளாம் ரொம்ப சுகப்பட்டுட்டாளே!

சோம:— 'ஆத்மாநாம் புத்ர நாமாஸி' யல்லவோ?

சோ. ம:—இன்னும் கூடவா இதெல்லாம் கட்டிண்டு அழறேள்? சிந்து நதியிலே கரைச்சுட்டு வந்துட்டேள்னு நெனெச்சேன்?

சோம:— ஆமாம்—அக்னிஹோத்ர குண்டம் எடுத்துண்டையாடி?

சோ. ம:—அறுவாமணை எடுத்துண்டேன் கறி காய் நறுக்கறதுக்கு.

சோம:— சிவ! சிவ! பிராமணீகம் போச்சு—அது கிடக்கிறது. பூஜை பெட்டி எடுத்துண்டையா?

சோ. ம: இந்தச் சனியனெல்லாம் ஆத்திலேயே சொல்லித் தொலைக்கறது தானே. இங்கே வந்து மல்லுக்கிழுத்தா? புடலம் விரையை எடுத்துக்கோன்னு சொன்னேள்; அதை மறக்காமல் எடுத்துண்டேன்.

சோம:— அது பேய்ப் புடலன்னுடி அது!—விசுவாமித்திர சிருஷ்டி! அது என்னத்துக்கு பிரயோஜனம்?

சோ. ம:—நீங்களும் நானும் என்னத்துக்கு பிரயோஜனம்?

சோம:— [ஊக்க] என்னது? ஒ! ஒ! ஏது? வாய் மிஞ்சி பூட்டாப்போலே இருக்குது.

சோ. ம:—ஏன் அரசமரத்துக் காற்று மாதிரி அடிச்சுக்கிரேள்?

சோம:— காலம் கெட்டுப் போச்சு; கலியுகம் பிறக்கறதுக்கு ஆச்சோ இல்லையோ?

சோ. ம:—அதனாலே தான் சுபத்திரை, அநியாயமா இப்படி தன் ஒரு பிள்ளையை பறி கொடுத்துட்டு நிக்கறாள்!

சோம:— இன்னொன்னாலும் அபிமன்யுவைக் கொன்னது அநியாயம் அநியாயந்தான். நாமெல்லாம் கௌரவர்கள் பிரஜைகள் தான்; இருந்தாலும் நியாயத்தே சொல்லணும் பாரு.

சோ. ம:—அதனாலே தான் தட்சண தேசம் போறேளோ?

சோம:— ஆமாம்; "யதா ராஜா ததாப்பிரஜா."

சோ. ம:—போதும் நிறுத்துங்கோ; உங்க வியாகரணம் தர்க்கத்திலே கொண்டு முட்றது. வாங்கோ போகலாம்.

சோம:— ஆமாம்: தேவ தேவ மஹா தேவ——

[இருவரும் செல்கிறார்கள். கிருஷ்ணரும் அர்ஜுனனும் வேறொரு புறமாகப் பேசிக்கொண்டே வருகிறார்கள்]

அர்:— பகவன்! தங்கள் அநுக்ரஹத்தால் இன்று சம் சப்தகர்கள் வெற்றி கொள்ளப்பட்டார்கள்.

கிரு:— எல்லாம் உனது காண்டீவத்தின் மகிமைதான்——!

அர்:— ஆயினும் சத்ருக்களை வென்றதனாலுண்டாகும் மகிழ்ச்சி இன்று ஏன் மனக்கு உண்டாகவில்லை?

கிரு:— அர்ஜுனா! அண்ட சராசரங்கள் யாவும் ஒரு நியமத்திற்குட்பட்டே நடைபெற்று வருகின்றன. இதனின்றும் மாந்தர் மாற முடியாது.

அர்:— இந்தத் தத்துவங்கள் என்செவியில் புகவேயில்லை. ஆனால் என்னையறியாமலே கண்களில் நீர் பெருகுகிறது; ஹிருதய நாடி வேகமாக அடிக்கிறது; உலகமெல்லாம் சூனியமாக என் கண்களுக்குப் புலப்படுகிறது. இந்த விபரீதத்து ர காரணமென்ன?

கிரு:— காரக ம் என்னவென்று கூறுவேன்? காரியமொன்றையே கண்ணால் பார்க்கிறேன்.

அர்:— அண்ணல்! தங்கள் மாயையை யார் அறியவல்லார்? ஆயினும் நாம் விரைவில் நமது பாசறைக்குச் செல்வோம். தர்மாத்மா யுதிஷ்டிரரை விரைவிலே சென்று காண வேண்டுமென்ற ஆவல் கணத்திற்குக் கணம் அதிகமாகிறது.

கிரு:— அவசியம் செல்வோம்.

[செல்கிறார்கள்]

## நான்காவது களம்.

இடம்:— பாண்டவர் பாசறை.

காலம்:— பிற்பகல்.

[அபிமன்யுவின் சவம் கிடத்தப்பட்டிருக்கிறது. தலைப்பக்கம் உத்தரை அழுது கொண்டிருக்கிறாள். ஒரு புறம் அர்ஜுனன் மூர்ச்சையாகிக் கிடக்கிறான். மற்றொரு புறம் சுபத்திரை தலை விரிகோலமாய் பிரலாபித்துக் கொண்டிருக்கிறாள்]

சுபத்திரை:—[அபிமன்யுவின்] தேகத்தைத் தடவிக் கொடுத்து] கண்ணே! அபிமன்யு! உன் மிருதுவான தேகத்திலே எத்தனை காயங்கள்? ஐயோ! நானிட்ட வீரதிலகம் இன்னும் அழியாமலிருக்கிறதே! ஹா! கன்றிழந்த பசுவாய்க் கதறி நிற்கிறேன். அபிமன்யு! வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லு. [பொறுத்து] கண்ணே! என் வாழ்வைச் சூனியமாக்கிவிட்டு என் அடிவயிற்றிலே நெருப்பிட்டு விட்டு எங்கடா சென்றுவிட்டாய்? "வெற்றி

மாலையுடன் திரும்பி வந்து வணங்குகிறேன்" என்று எவ்வளவு மிடுக்காகச் சொன்னுயடா? இப்பொழுது நான் உன் பக்கத்திலே விழுந்து அழுது கொண்டிருக்கிறேன். கண்ணெடுத்துப் பார்க்கமாட்டாயா? ஐயோ! காலையிலே இங்கிருந்தாய்; பகலிலே உன்னைப் படுக்க வைத்துப் பிலாபித்துக் கொண்டிருக்கிறேன். அப்பா! அபிமன்யு !

[கிருஷ்ணர் பிரவேசிக்கிருர்]

கிருஷ்ணர்:—சுபத்திரே!

சுப:— அண்ணு ! அண்ணு !! என் அபிமன்யு எங்கே? உன் மருமகன் எங்கே? கண்ணு! என் வாழ்வெல்லாம் வீழ்ந்து விட்டது! என் முதுமையின் ஊன்றுகோல் ஒடிந்துவிட்டது! நின் திருக்கோலம் இங்கிருக்க, என்னருமைக் குமாரன் பிணக்கோலமாகக் கிடக்கிருன் ! [அபிமன்யுவின் சவத்தைப் பார்த்து] அப்பா! மகனே! பாரதேசத்துப் பெரும்புகழைச் சுதன்மையில் எடுத்துச் சொல்லச் சென்றனையோ? கொஞ்சி நின்ருர் கதற, கூடி நின்ருர் பதற, எஞ்சியுள்ளார் இரங்கி ஏங்க, வஞ்சமாகக் கௌரவர்கள் கொன்ற கதையைக் காலனிடத்தில் தெரிவிக்கப் போயினையோ? சூரபத்மனை வெல்ல சுப்பிரமணியக் கடவுள் சென்றதுபோல் யுத்த களத்திற்குச் சென்ருய்! ஆனல்—ஆனல்—மகனே ! மகனே ! [மூர்ச்சையாகிருள்]

கிரு:— சுபத்திரே! அபிமன்யு இறக்கவில்லை; அமரனுய் வாழ்ந்து கொண்டிருக்கிருன். வீரர்களின் இலட்சிய புருஷனுய், பாரதவர்ஷத்தின் கௌரவமாய், இளைஞர்களின் உள்ளத்திலே, பத்தினிப் பெண்டிரின் இசையிலே பிரகாசித்துக் கொண்டிருக்கிருன் !

ஓம். சாந்தி ! சாந்தி ! சாந்தி !

---

